

# குர்ஆன் தொகுப்பு



| வரிசை எண் | தலைப்பு |
|---|---|
| 1 | முகமது நபிக்கு வந்த முதல் வஹி |
| 2 | நபியின் மரணமும் சந்தேகமும் |
| 3 | அபுபக்கரும்... நபி வழியும் |
| 4 | சகாபாக்களும் நபி வழியும் |
| 5 | அன்னை ஆயிஷா அவர்களும்....நபி வழியும் |
| 6 | குர்ஆன் தொகுப்பு |
| 7 | கல்லெறி சட்டம் பால் குடி சட்டம் குர்ஆனில் எங்கே |
| 8 | ஆயிஷா அவர்களிடம் இருந்த குர்ஆன் |
| 9 | Abu ‘Ubaid on the Verses Missing from the Koran |
| 10 | முகமது நபியின் மரணம் சொல்லும் செய்தி சான்றுகளுடன் ஒரு பார்வை |

CONDENT & EDIT

ABI

JEBA

# குர்ஆன் தொகுப்பு

முகவுரை :~

இதில் குர்ஆன் வசனங்கள் எந்த அளவுக்கு உயிர் உள்ளது அதின் மதிப்பு என்ன என்று தெரிந்து கொண்டு துவங்க படுகிறது. முகமது நபி அவர்களுக்கு முதலில் கிடைத்த இறைசெய்தியே எந்த அளவுக்கு முரண்பாடுகள் நிறைந்தது என்று பார்க்கலாம். பிறகு முகமது நபி அவர்களின் மரணத்தில் உள்ள சந்தேகத்தை பார்க்கலாம் பிறகு முகமது நபி அவர்களின் இறப்புக்கு பிறகு அபுபக்கர் அவர்கள் எவ்வாறு குர்ஆனுக்கும் முகமது நபி அவர்களின் சொல்லுக்கும் முரணாக செயல்பட்டார் என்று பார்க்கலாம். பிறகு . பிறகு உமர் அவர்கள் எவ்வாறு குர்ஆனுக்கும் முகமது நபி அவர்களுக்கும் முரணாக செயல்பட்டவர் என்று பார்க்கலாம் கூட அப்துல்லாஹ் இப்னு மசூத், முகமது நபி அவர்களின் மகள் பாத்திமா, அன்னை ஆயிஷா இவர்கள் எல்லோருமே குர்ஆன் வசனங்கள் முகமது நபி அவர்களின் வார்த்தைகளுக்கு எதிராக செயல்பட்டவர்கள் என்று பார்க்கலாம். காரணம் இவர்கள் மூலமாக தான் இந்த குர்ஆன் நமுக்கு கிடைத்து இருக்கிறது. இவர்களே குர்ஆனுக்கும் முகமது நபி அவர்களின் வார்த்தைக்கும் எதிராக செயல்ப்பட்டவர்கள் என்றால் இவர்கள் மூலமாக வந்த குரான் எந்த அளவுக்கு நன்பகத்தன்மையுடையது என்றுசிந்தித்து பார்க்க வேண்டும். பிறகு குர்ஆன் தொகுப்பை குறித்து நாம் பார்க்கலாம். அதின் பிறகு குர்ஆனில் இருந்து விடுபட்ட வசனங்களை பார்க்கலாம். பிறகு முகமது நபி அவர்கள் குர்ஆனில் இட்டுகட்டினார் என்பதையும் நாம் பார்க்கலாம். இவற்றின் மூலம் குர்ஆன் உண்மையில் பாதுகாக்க படவில்லை என்பது நமுக்கு புரிய வரும்.

# முகமது நபிக்கு வந்த முதல் வஹி

நாம் குர்ஆன் எப்படி தொகுக்கப்பட்டது என்று அறிந்து கொள்ள வேண்டுமானால் குரானுக்கு பிறகு இறக்குறைய 300 ஆண்டுகளுக்கு பிறகு வந்த ஹதீஸை பார்த்து தான் நாம் புரிந்து கொள்ள முடியும். உதாரணமாக குர்ஆன் முதல் வசனம் எது எப்போது இறக்கப்பட்டது என்று நாம் பார்த்தோமானால் பல்வேறு முரண்பாடுகளை அதில் நாம் பார்க்க முடியும்.அதை நாம் தொடர்ந்து பார்ப்போம். இஸ்லாமியர்கள் உறுதியாக நம்ப கூடிய ஒரு புத்தகம் தான் இந்த குர்ஆன். இஸ்லாமியர்கள் குர்ஆனின் பாதுகாப்பை குறித்து அவர்கள் நம்பும் வசனம் குர்ஆன் ; 15 ; 9 ஆகும்.

إِنَّا نَحْنُ نَزَّلْنَا الذِّكْرَ وَإِنَّا لَهُ لَحٰفِظُوْنَ

**நிச்சயமாக நாம் தான் (நினைவூட்டும்) இவ்வேதத்தை (உம்மீது) இறக்கி வைத்தோம்; நிச்சயமாக நாமே அதன் பாதுகாவலனாகவும் இருக்கின்றோம்.**

(அல்குர்ஆன் : 15:9)

இந்த வசனத்தை வைத்து கொண்டு குர்ஆனை பாதுகாக்கும் பொறுப்பை அல்லாஹ் ஏற்றுக்கொள்கிறார் என்று இஸ்லாமியர்கள் நம்புகின்றனர். ஆனால் இந்த வசனம் எந்த அளவுக்கு நன்பக தன்மை இல்லை என்று தொடர்ந்து கீழே நாம் பார்ப்போம். இப்போது குர்ஆனில் ஒரு வசனத்தை நாம் பார்ப்போம் 87; 6 ஆம் வசனம்.

سَنُقْرِئُكَ فَلَا تَنْسٰٓىۙ

**(நபியே!) நாம் உமக்கு ஓதக்கற்றுக் கொடுப்போம்; அதனால் நீர் அதை மறக்கமாட்டீர்-**

(அல்குர்ஆன் : 87:6)

இங்கே அல்லாஹ் நபிக்கு ஒரு வாக்குதத்ததை கொடுக்கிறார். அதாவது நாமே உமக்கு ஓத கற்று கொடுப்போம் அதனால் நீர் மறக்க மாட்டோம் என்று. ஆனால் முகமது நபி அவர்களை குறித்து பதிவு செய்யப்பட்ட ஹதீஸ்களில் நாம் பார்த்தோமானால் முஸ்லீம் 1443 ஆம் ஹதீஸில் நாம் பார்க்கும் போது

# குர்ஆன் தொகுப்பு

**ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:**

**பள்ளிவாசலில் ஒரு மனிதர் (குர்ஆன்) ஓதிக்கொண்டிருப்பதைச் செவியுற்ற நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ், அவருக்குக் கருணைபுரிவானாக! (இன்ன அத்தியாயத்திலிருந்து) எனக்கு மறக்கவைக்கப்பட்டிருந்த இன்ன வசனத்தை அவர் எனக்கு நினைவூட்டிவிட்டார் என்று சொன்னார்கள்**. -.........

ஸஹீஹ் முஸ்லிம் : 1443.

முகமது நபி அவர்களுக்கு மறந்த இன்ன வசனத்தை நினைப்பூட்டினார் என்று பார்க்கிறோம். அல்லாஹ் சொல்கிறார் **நாம் கற்று கொடுத்த படியால் நீர் மறக்க மாட்டீர்** என்று ஆனால் அதற்கு நேர் முரணாக முகமது மறந்தார் என்று ஹதீஸில் நாம் பார்த்தோம். அப்போது இஸ்லாமியர்கள் நம்ப கூடிய இந்த குரான் வசனங்களின் நிலை நன்பகதன்மை கேள்விக்குறியாகிறது. நாம் கவனிக்க வேண்டிய இன்னொரு விஷயமும் இதில் இருக்கிறது. சாதாரணமாக இஸ்லாமியர்கள் சொல்வார்கள் குர்ஆன் ஓசை வடிவில் பாதுகாக்கப்பட்டது என்று. ஆனால் இஸ்லாமியர்களின் பார்வையில் மானவரில் மகா உன்னதரான முகமது நபி அவர்களுக்கே மறந்தது என்றால் ஓசை வடிவில் பாதுகாக்கப்பட்டது என்னும் வாதமே கேள்விக்குறியாகிறது.

சரி இப்போது குர்ஆனின் முதல் வசனங்கள் எப்படி இறங்கினது என்று முதலில் நாம் பார்ப்போம். புகாரி மூன்றாம் ஹதீஸில் இதை இதை குறித்து நாம் பார்க்கலாம். . அந்த ஹதீஸின் துவக்கத்தில் நாம் இப்படியாக பார்க்கலாம் **ஆரம்பத்தில் இறைசெய்தி தூக்கத்தில் தோன்றும் நல்ல கனவுகளிலேயே வந்தது**. என்று. ஆனால் வந்த இறைசெய்தி என்ன என்பதை எழுதியும் வைக்கவில்லை சொல்லவும் இல்லை. அது ரொம்ப முக்கியமானது. முகமது நபி அவர்கள் ஹிரா குகையில் அடிக்கடி சென்று வருவதாகவும் சில சமயங்களில் அங்கே தங்குவதாகவும் ஒரு நாள் திடீரென்று ஒருநாள் ஒரு வானவர் வந்து அவரை கட்டி பிடித்து ஓதுவீராக என்று சொல்கிறதாக நாம் பார்க்கலாம். இது தான் குர்ஆன் 96 ஆம் அதிகாரத்தின் முதல் ஐந்து வசனமாக இருக்கிறது. புகாரி 4953 ஆம் ஹதீஸில் இந்த விஷயங்கள் இருக்கிறதை நாம் பார்க்கிறோம். 6982 ஆம் ஹதீஸிலும் இந்த விஷயங்கள் இருக்கிறதை நாம் பார்க்கிறோம். இதில் இருந்து 96 ஆம் அதிகாரம் ஒன்று முதல் ஐந்து வரை உள்ள வசனங்கள் தான் முதலில் இறக்கப்பட்டது என்று நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது.

ஆனால் இன்னொரு ஹதீஸ் சொல்கிறதை நாம் பார்த்தோமானால் புகாரி 4924 ஆம் ஹதீஸில் வேறு ஒரு விதமாக பதிவு செய்யப்பட்டதை நாம் பார்க்கலாம்.

**யஹ்யா இப்னு அபீ கஸீர்(ரஹ்) அறிவித்தார்**

**நான் அபூ ஸலமா(ரஹ்) அவர்களிடம் 'முதன் முதலாக அருளப்பெற்ற குர்ஆன் வசனம் எது?' என்று கேட்டேன். அதற்கு அன்னார், 'போர்த்தியிருப்பவரே!' (யா அய்யுஹல் முத்தஸ்ஸிர்) எனும் (திருக்குர்ஆன் 74:1 வது) வசனம் என்றார்கள். அப்போது நான், '(நபியே!) படைத்த உங்களுடைய இறைவனின் பெயரால் ஓதுக!' (இக்ரஃ பிஸ்மி ரப்பிக் கல்லஃதீ கலக்) எனும் (திருக்குர்ஆன் 96:1 வது) வசனம் என்றல்லவா எனக்கு அறிவிக்கப்பட்டுள்ளது! என்றேன். அதற்கு அபூ ஸலமா(ரஹ்), 'நான் ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்களிடம், 'முதன் முதலாக அருளப்பெற்ற குர்ஆன் வசனம் எது?'**

**என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'யா அய்யுஹல் முத்தஸ்ஸிர்' எனும் (திருக்குர்ஆன் 74:1 வது) வசனம் என்று கூறினார்கள். உடனே நான், 'இக்ரஃ பிஸ்மி ரப்பிக்கல்லஃதீ கலக்' எனும் (திருக்குர்ஆன் 96:1 வது) வசனம் தான் (முதன் முதலில் அருளப்பட்ட வசனம்) என்று எனக்கு அறிவிக்கப்பட்டுள்ளதே! என்று கேட்டேன். அதற்கு ஜாபிர்(ரலி), 'நபி(ஸல்) அவர்கள் சொன்னதைத் தவிர வேறெதையும் உங்களுக்கு நான் தெரிவிக்கப்போவதில்லை.**

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:

நான் 'ஹிரா' மலைக் குகையில் தங்கியிருந்தேன். நான் என் தங்குதலை முடித்துக்கொண்டு (மலையிலிருந்து) இறங்கி அங்கிருந்த பள்ளத்தாக்கின் நடுவே வந்து சேர்ந்திருப்பேன். அப்போது என்னை அழைக்கும் குரலைக் கேட்டேன். உடனே நான் எனக்கு முன்புறத்திலும் எனக்குப் பின்புறத்திலும் எனக்கு வலப்பக்கத்திலும் எனக்கு இடப்பக்கத்திலும் பார்த்தேன். அப்போது அவர் (ஜிப்ரீல்) வானத்திற்கும் பூமிக்குமிடையே ஓர் ஆசனத்தில் அமர்ந்திருந்தார். உடனே நான் கதீஜாவிடம் சென்று 'எனக்குப் போர்த்திவிடுங்கள்! என் மீது குளிர்ந்த நீரை ஊற்றுங்கள்!' என்று கூறினேன். மேலும், எனக்கு, 'போர்த்திக் கொண்டு (படுத்து) இருப்பவரே, எழுந்து எச்சரிக்கை செய்யுங்கள். மேலும், உங்களுடைய இறைவனைப் பெருமைப்படுத்துங்கள்' எனும் (திருக்குர்ஆன் 74:1-3) இறைவசனங்கள் அருளப்பெற்றன. 4

ஸஹீஹ் புகாரி : 4924.

# குர்ஆன் தொகுப்பு

இந்த ஹதீஸில் குர்ஆன் 74 ஆம் அதிகாரம் ஒன்று முதல் மூன்று வரை உள்ள வசனங்கள் தான் முதலில் இறக்கபட்டதாக சொல்லப்படுகிறது. இங்கே இரண்டு முரண்பட்ட விஷயங்கள் இருக்கிறது. அது என்னவென்றால்

1:~குர்ஆனில் முதலாவது வசனம் ஹுரா குகையில் வைத்து 96ஆம் அதிகாரம் ஒன்று முதல் ஐந்து வரை உள்ள வசனங்கள் இரக்கபட்டதாக ஒரு ஹதீஸ் சொல்கிறது.

ஆனால் அதே புகாரியில் இன்னொரு ஹதீஸில்

2;~ 74 ஆம் அதிகாரத்தின் ஒன்றாம் வசனம் தான் முதலில் தனது வீட்டில் வந்து அவர் போர்த்தி கொண்டு இருந்த போது போர்த்திக்கொண்டு இருப்பவரே என்று இறங்கினது

என்று இவ்வாறு முரண்பட்ட விஷயங்கள் நாம் பார்க்கிறோம். இப்போது 96 ஆம் அதிகாரத்தில் உள்ள வசனங்கள் தான் முதலில் இறங்கினது என்ற ஹதீஸ்களில் சொல்லப்பட்டு இருக்கும் காரியம் என்னவென்றால் ஓதுவீராக என்னும் வசனம் இறக்கப்பட்ட பிற்பாடு பல நாட்கள் குர்ஆன் வசனங்கள் இறங்கவில்லை என்றும் நாம் பார்க்கலாம். ஆனால் இந்த இடத்தில் நாம் பார்க்கும்போது முகமது நபி அவர்கள் வீட்டிற்க்கு வந்து போர்த்திக்கொண்டு இருக்கும்போது தான் குர்ஆன் வசனம் இறங்கினது என்று பார்க்கலாம். அப்போது முதல் வசனமே எப்படி வந்தது என்பதே முகமது நபி அவர்கள் மூலமாக வந்து இருக்கிறது என்று ஆதாரம் ஹதீஸ்களில் இருக்கிறது. ஒரு வேளை முகமது நபியின் சொல் செயல் அங்கீகாரம் தான் இந்த ஹதீஸ்கள் என்றால் அவர் இரண்டு விதமாக சொல்லி இருக்கிறார்.

முதலாவது நாம் பார்த்து மனனம் செய்ததையே மறக்க கூடிய நிலையில் இருந்து இருக்கிறார் என்று. அப்போது நாம் முதலில் பார்த்த நாமே இறங்கினோம் இதை நாமே பாதுகாப்போம் என்ற வசனம் அடிப்படையிலேயே கேள்விக்குறியாகிறது.

# நபியின் மரணமும் ... சந்தேகமும்

# குர்ஆன் தொகுப்பு

முதலாவது நாம் குர்ஆனில் இருந்து ஒரு வசனத்தை பார்ப்போம்

53 ஆம் அதிகாரம் 3,4 ஆகிய வசனங்கள்.

وَمَا يَنْطِقُ عَنِ الْهَوٰى

**அவர் தம் இச்சைப்படி (எதையும்) பேசுவதில்லை.**

(அல்குர்ஆன் : 53:3)

اِنْ هُوَ اِلَّا وَحْىٌ يُّوْحٰىۙ

**அது அவருக்கு வஹீ மூலம் அறிவிக்கப்பட்டதேயன்றி வேறில்லை.**

(அல்குர்ஆன் : 53:4)

இங்கே முகமது நபி அவர்கள் தமது இச்சையின் படி எதையும் பேசுவதில்லை என்று நாம் பார்க்கிறோம். நாம் இன்னும் குர்ஆனில் இருந்து இன்னொரு வசனத்தையும் பார்ப்போம்.

يٰۤـاَيُّهَا الرَّسُوْلُ بَلِّغْ مَاۤ اُنْزِلَ اِلَيْكَ مِنْ رَّبِّكَ‌ وَاِنْ لَّمْ تَفْعَلْ فَمَا بَلَّغْتَ رِسٰلَـتَهٗ‌ وَاللّٰهُ يَعْصِمُكَ مِنَ النَّاسِ‌ اِنَّ اللّٰهَ لَا يَهْدِى الْقَوْمَ الْـكٰفِرِيْنَ

**தூதரே! உம் இறைவனிடமிருந்து உம்மீது இறக்கப்பட்டதை (மக்களுக்கு) எடுத்துக் கூறிவிடும்; (இவ்வாறு) நீர் செய்யாவிட்டால், அவனுடைய தூதை நீர் நிறைவேற்றியவராகமாட்டீர்; அல்லாஹ் உம்மை மனிதர்களி(ன் தீங்கி)லிருந்து காப்பாற்றுவான்;** நிச்சயமாக அல்லாஹ் நிராகரிக்கும் கூட்டத்தாரை நேர்வழியில் செலுத்தமாட்டான்.

(அல்குர்ஆன் : 5:67)

இங்கே அல்லாஹ் சொல்கிறார் இறைவனிடம் இருந்து உம் மீது இறக்கபட்டதை மக்களுக்கு எடுத்து கூறி விடும். அவ்வாறு செய்ய விட்டால் அவனுடைய தூதை நீர் நிறைவேற்றியவராகமாட்டீர் முடியும் இன்னும் **உம்மை மனிதர்களின் தீங்கில் இருந்து காப்பாற்றுவேன்** என்று முகமது நபிக்கு அல்லாஹ் வாக்கு கொடுக்கிறார். இதன் அர்த்தம் என்னவென்றால் மனிதர்கள் வைக்கும் தீங்கில் இருந்து அல்லாஹ் முகமது நபியை காப்பாற்றுவார் என்பதாகும். ஆனால் முகமது நபி அவர்களின் வாழ்க்கை வரலாற்றை பார்த்தோமானால் முகமது நபி சூனியத்தால் பாதிக்கப்பட்டார்

என்று பார்க்க முடியும். (புகாரி 3175, 3268, 5763, 5765 ஆகிய ஹதீஸ்களில் பார்க்கலாம்) ஆனாலும் அதில் அவருக்கு விடுதலை கிடைத்து விட்டது என்று இஸ்லாமிய சகோதரர்கள் சொல்வார்கள். ஆனால் அவர் சூனியத்தால் பாதிக்கப்பட்டு இருந்தார் என்பது உண்மையே. சரி நாம் ஹதீஸ்களில் இன்னும் அதிகமாக பார்க்கும்போது புகாரி 3169 ஆம் ஹதீஸில் பார்க்கும்போது கைபர் போருக்கு பிறகு நடைபெற்ற ஒரு சம்பவத்தை நாம் பார்க்கலாம். அங்கே முகமது தன்னை நபியாக பிரகடன படுத்தின போது அங்கே இருந்த பெண் ஒருத்தி முகமது நபிக்கு என்ன பிடிக்கும் என்று விளா வாரியாக கேட்டு விட்டு ஆட்டுகறியின் தொடை பகுதியில் விஷத்தை தோய்த்து கொடுத்தாள். (அந்த ஹதீஸை படிக்கும்போது புரியும்) அது முகமது நபிக்கு தெரிந்து விட்டது. அப்போது முகமது நபி அவர்கள் அங்கே இருந்த யூதர்களை எல்லோரையும் ஒன்று திரட்டி நீங்கள் எனக்கு இந்த ஆட்டில் விஷம் கலந்து இருக்கிறீர்களா என்று கேட்டார். அதற்கு அவர்கள் ஆம் என்று சொன்னார்கள். இதில் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால் அந்த ஆட்டுக்கறியை முகமது நபி அவர்கள் சாப்பிட்டு விட்டு துப்பினார்கள். அதை முகமது சாப்பிட்ட படியால் அதினால் ஏற்ப்பட்ட விளைவு என்னவென்றால் புகாரி 4428 ஆம் ஹதீஸில்

**ஆயிஷா(ரலி) அறிவித்தார்**

**நபி(ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது, 'ஆயிஷாவே! கைபரில் (யூதப் பெண்ணொருத்தியால் விஷம் கலந்து தரப்பட்ட) அந்த உணவை நான் உண்டதால் ஏற்பட்ட வேதனையை நான் தொடர்ந்து அனுபவித்து வருகிறேன். அந்த விஷத்தின் காரணத்தால் என் இருதய இரத்தக்குழய் அறுந்து போவதை நான் உணரும் நேரமாகும் இது' என்று கூறினார்கள்**

ஸஹீஹ் புகாரி : 4428., 2617

இப்படியாக நாம் பார்க்கிறோம். அதாவது **கைபர் போரில் அந்த பெண் வைத்த விஷத்தினால் ஏற்பட்ட வேதனையை தொடர்ந்து அனுபவித்து வருவதாக** முகமது நபி அவர்களே சொல்கிறார். இங்கே நாம் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால் அல்லாஹ் குரானில் உம்மை நான் மனிதர்களின் தீங்கில் இருந்து காப்பாற்றுவேன் என்று சொல்லியிருக்க முகமது நபி அவர்கள் மனிதர்கள் வைத்த தீங்கை அனுபவித்து இறந்ததாக நாம் பார்க்கலாம். இப்போது இந்த குர்ஆன் வசனத்தின் மதிப்பை நீங்களே தீர்மானித்து கொள்ளுங்கள்.

# குர்ஆன் தொகுப்பு

**குர்ஆனின் இரண்டு வசனங்களை பார்ப்போம் ;~**

وَوَجَدَكَ عَآٮِٕلًا فَاَغْنٰى

**மேலும், அவன் உம்மைத் தேவையுடையவராகக்கண்டு, (உம்மைச் செல்வத்தால்) தேவையில்லாதவராக்கினான்.**

(அல்குர்ஆன் : 93:8)

وَاَنْكِحُوا الْاَيَامٰى مِنْكُمْ وَالصّٰلِحِيْنَ مِنْ عِبَادِكُمْ وَاِمَآٮِٕكُمْ‌ اِنْ يَّكُوْنُوْا فُقَرَآءَ يُغْنِهِمُ اللّٰهُ مِنْ فَضْلِهٖ‌ وَاللّٰهُ وَاسِعٌ عَلِيْمٌ

**இன்னும், உங்களில் வாழ்க்கைத் துணை இல்லா (ஆடவர், பெண்டி)ருக்கும், அவ்வாறே (வாழ்க்கைத் துணையில்லா) ஸாலிஹான உங்கள் (ஆண், பெண்) அடிமைகளுக்கும் விவாகம் செய்து வையுங்கள்; அவர்கள் ஏழைகளாக இருந்தால், அல்லாஹ் தன் நல்லருளைக் கொண்டு அவர்களைச் சீமான்களாக்கி வைப்பான்;** மேலும் அல்லாஹ் (கொடையில்) விசாலமானவன். (யாவற்றையும்) நன்கறிந்தவன்.

(அல்குர்ஆன் : 24:32)

இங்கே அல்லாஹ் சொல்கிறார் முகமது நபியை பார்த்து உம்மை செல்வத்தால் தேவையில்லாதவராக்கினேன் என்று. இன்னும் திருமணமாகாத அவர்களை திருமணம் செய்து வைய்யுங்கள். அவரகள் ஏழைகளாக இருந்தால் சீமான்களாக்கி வுடுவதாகவும் அல்லாஹ் சொல்லி இருக்கிறார். போரில் கிடைக்கும் பங்குகளில் குறிப்பிட்ட பங்கு முகமது நபி அவர்களுக்கும் இருந்தது. இதன் மூலம் அவர் செல்வந்தராக மாறினார். ஆனால் இன்னும் நாம் தொடர்ந்து பார்க்கும்போது புகாரி 2509 ஆம் ஹதீஸில் ;~

**அஃமஷ்(ரஹ்) அறிவித்தார்.**

**நாங்கள் இப்ராஹீம் நகயீ(ரஹ்) அவர்களிடம் அடைமானம் பற்றியும் கடனில் பிணை பற்றியும் கருத்துப் பரிமாற்றம் செய்து கொண்டோம். அப்போது இப்ராஹீம் நகயீ(ரஹ்), 'நபி(ஸல்) அவர்கள் யூதர் ஒருவரிடமிருந்து ஒரு குறிப்பிட்ட தவணைக்கு (பிறகு பெற்றுக் கொள்வதாக) உணவுப் பொருளை வாங்கினார்கள்; (அதற்காக) தம் கவசத்தை அடைமானம் வைத்தார்கள்' என்று ஆயிஷா(ரலி) கூறினார் என எமக்கு அஸ்வத்(ரலி) அறிவித்தார்' என்று கூறினார்கள்.**

# குர்ஆன் தொகுப்பு

ஸஹீஹ் புகாரி : 2509.

இங்கே முகமது நபி அவர்கள் யூதர் ஒருவரிடம் இருந்து பொருளை அடைமானம் வைத்து உணவு பொருட்களை வாங்கினார் என்று. இன்னும் முகமது நபி அவர்கள் திருமணமும் செய்து இருக்கிறார். ஆனால் முகமது நபி அவர்கள் யூதனிடம் பொருட்களை அடமானம் வைத்து உணவு பொருகளை வாங்கும் நிலைக்கு தள்ளப்பட்டார் என்று நாம் ஹதீஸில் பார்க்கிறோம். அப்போது அந்த குர்ஆன் வசனகளின் மதிப்பை நீங்களே தீர்மானித்து கொள்ளுங்கள். குர்ஆன் ஒன்றை சொல்ல அதற்கு நேர் முரணாக முகமது நபி அவர்களின் வாழ்க்கை ஹதீஸ்களில் இருக்கிறது.

சரி. நாம் முதலில் பார்த்த வசனகளுக்கு திரும்புவோம்53; 3, 53; 4, 5;76 ஆகிய வசனங்களில் முகமது நபி அவர்கள் தமது இச்சைகளின் படி எதுவும் பேசுவதில்லை என்றும் அது அவருக்கு வஹீ மூலம் அறிவிக்கப்பட்டதேயன்றி வேறில்லை என்றும் இன்னும் முகமது நபியை பார்த்து அல்லாஹ் சொல்கிறார் உம் மீது இரக்கபட்டதை மக்களுக்கு கூறி விடும் என்றும் அவ்வாறு செய்யாவிட்டால் அவருடைய தூதை நிறைவேற்றியவராகமாட்டீர் என்றும் அல்லாஹ் சொல்கிறார். ஆனால் இதற்கு நேர் முரணாக ஹதீஸில் புகாரி 114 ஆம் ஹதீஸில் ;~

**நபி(ஸல்) அவர்களின் மரண வேதனை அதிகமானபோது 'என்னிடம் ஓர் ஏட்டைக் கொண்டு வாருங்கள். எனக்குப் பிறகு நீங்கள் வழி தறவி விடாதவாறு ஒரு மடலை நான் உங்களுக்கு எழுதித் தருகிறேன்' என்று கூறினார்கள்**. 'நபி(ஸல்)அவர்களுக்கு வேதனை அதிகமாகிவிட்டது; **நம்மிடம் அல்லாஹ்வின் வேதம் இருக்கிறது. அது நமக்குப் போதுமானது' என்று உமர்(ரலி) கூறினார்.** உடனே (தோழர்களுக்கிடையில்) கருத்து வேறுபாடு எழுந்து கூச்சலும் குழப்பமும் மிகுந்துவிட்டன. இதைக் கண்ட நபி(ஸல்) அவர்கள், 'என்னைவிட்டு எழுந்து செல்லுங்கள்; என் முன்னிலையில் (இதுபோன்ற) சச்சரவுகள் எதுவும் இருக்கக் கூடாது' என்றார்கள்.

'நபி(ஸல்) அவர்களுக்கும் அவர்கள் (எழுத நினைத்த) மடலுக்கும் குறுக்கே தடையாக நிகழ்ந்துவிட்ட சோதனை பெரும் சோதனைதான்' என்று கூறியவராக அங்கிருந்து

இப்னு அப்பாஸ்(ரலி) வெளியேறிவிட்டார்' என இப்னு அப்பாஸ்(ரலி) வாயிலாக உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ் அறிவித்தார்*

ஸஹீஹ் புகாரி : 114.

இப்படியாக நாம் பார்க்கிறோம். குர்ஆனில் நபி தனது சுய விருப்பத்தின் படி எதையுமே பேசுவதில்லை என்று இருக்கும்போது தான் மரிக்க போகும் **தருவாயில் நீங்கள் வழி தவறி விடாதவாறு ஒரு மடலை எழுதி தருகிறேன்** என்று கூறும்போது உமர் வந்து நம்மிடம் வேதம் இருக்கிறது அதினால் அதுவே நமுக்கு போதுமானது என்று தடுக்கிறதை நாம் பார்க்கலாம். இங்கே நாம் ரொம்ப சிந்திக்க வேண்டிய விஷயம் என்னவென்றால் முதலாவது முகமது ஒரு நபி. இரண்டாவது அவர் இறக்க போதும் தருவாயில் அவர் சொன்னதை நாம் கவனிக்க வேண்டும். இப்படி ஒரு முக்கியமான காரியத்தை முகமது நபி அவர்கள் எழுதும்படி முற்படும் போது உமர் அதை தடுத்து விடுகிறார். அப்போது முழுமையான இறைசெய்தி எப்படி இஸ்லாமியர்களுக்கு கிடைத்து இருக்கும் என்பதை நாம் சிந்தித்து பார்க்க வேண்டும். நாம் இன்னொரு ஹதீஸையும் பார்ப்போம். இஸ்லாமிய சகோதரர்கள் அதிகம் மேன்மையாக புகழ கூடியவர் தான் முகமது நபி அவர்கள். அவரை மிக உன்னதமான நிலையில் போற்றுவதை நாம் பார்க்கலாம். என்னுடைய தாயும் தந்தைக்கும் மேலானவர் என்று. ஆனால் முகமது நபி அவர்களோடு கூட இருந்த ஸகாபிகள் அவருடைய கடைசி நாட்களில் மரண தருவாயில் உள்ள சில சம்பவங்களை பார்க்கும்போது அவருக்கு கொடுத்த மதிப்பு என்ன என்று நாம் பார்த்தால் புகாரி 712 ஆம் ஹதீஸில் முகமது நபி அவர்கள் மரணிப்பதற்க்கு முன் நோய்வாய்ப்பட்டு இருந்த போது அபுபக்கரை தொழுகை நடத்த சொல்கிறார். ஆனால் முகமது நபி மீண்டும் அபுபக்கரை தொழுகை நடத்த சொல்கிறார்.

ஆனால் மறுபடியும் ஆயிஷா மறுத்து விடுகிறாள். இவ்வாறே மூன்று அல்லது நான்கு முறை ஆயிஷா(ரலி) அவர்கள் மறுத்து விடுகிறார்கள். உடனே முகமது நபி அவர்கள் ஆயிஷாவை நோக்கி சற்று கடுமையான வார்த்தையால் **நீங்கள் யூசப் நபியின் தோழியராக இருக்கிறீர்கள்.** என்று சொல்லி மறுபடியும் அபுபக்கரை தொழுகை நடத்த சொன்னார். தொடர்ந்து வாசிக்கும்போது அபுபக்கர் தொழுகை நடத்தியதாக பார்க்கலாம். இதில் நாம் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால் அந்த ஹதீஸை தொடர்ந்து வாசிக்கும்போது **நபி அவர்கள் கால்கள் தரையில் இழுபடுமாறு இரண்டு மனிதர்ளுக்கிடையே தொங்கியவாறு பள்ளிக்கு கொண்டு சென்றனர்** என்று பார்க்கிறோம். எவ்வளவு மதிப்புகுரியவர் என்று இஸ்லாமிய சகோதரர்கள் சொல்வார்களோ அவரை அன்றைக்கு இருந்தவர்கள் கொடுத்த மதிப்பு இது தான். இதை எல்லாம் நாம் ஏன் ஆராய்ந்து பார்க்கிறோம் என்றால் இன்றைக்கு

முகமது நபி அவர்கள் சொன்ன குர்ஆன் அதே மாதிரி தான் இருக்கிறது என்று சொல்லும்போது அதற்கான வாய்ப்புகள் எவ்வளவு சதவீதம் உண்மை என்று நாம் சிந்தித்து பார்க்க வேண்டும்.

# அபுபக்கரும்.... நபி வழியும்.

முகமது நபி அவர்களின் மரணத்துக்கு பிறகு என்ன நடந்தது என்று நாம் பார்ப்போம். ஒரு ஹதீஸை பார்ப்போம் புகாரி 3667

**............. உமர்(ரலி) எழுந்து, 'அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறக்கவில்லை. என் உள்ளத்தில் அப்படித்தான் - நபி(ஸல்) அவர்கள் இறக்கவில்லை என்றே - தோன்றுகிறது. அவர்களை அல்லாஹ் (இப்போதே) நிச்சயம் எழுந்திருக்கச் செய்வான். அப்போது அவர்கள் (நபி - ஸல்- அவர்கள் இறந்துவிட்டார்கள் என்று கூறிய) பலரின் கைகளையும் கால்களையும் துண்டிப்பார்கள்' என்று கூறினார்கள்...........**

குறிப்பாக நாம் இந்த இடத்தில் அறிந்து கொள்ள வேண்டிய விஷயம் என்னவென்றால் முகமது நபி அவர்களின் மரணத்திற்கு பிறகு உமர் அவர்கள் ஒரு வார்த்தையை சொல்கிறார்கள். அல்லாவின் தூதர் மரிக்கவில்லை அவர் எழுந்து வருவார். அவர் எழுந்து வந்து அவர் மரித்தார் என்று சொன்னவர்களின் கையையும் காலையும் துண்டித்து விடுவார் என்று சொல்கிறார். அப்போது அபுபக்கர் வந்து குர்ஆன் 39;30 ஆம் வசனத்தையும்

اِنَّكَ مَيِّتٌ وَّاِنَّهُمْ مَّيِّتُوْنَ

**நிச்சயமாக நீரும் மரிப்பவர்;** நிச்சயமாக அவர்களும் மரிப்பவர்களே.

(அல்குர்ஆன் : 39:30)

**குர்ஆன்** 3 ; 144

# குர்ஆன் தொகுப்பு

**முஹம்மது(ஸல்) (இறைவனின்) தூதரே அன்றி(வேறு) அல்லர்; அவருக்கு முன்னரும் (அல்லாஹ்வின்) தூதர்கள் பலர் (காலம்) சென்றுவிட்டார்கள்; அவர் இறந்து விட்டால் அல்லது கொல்லப்பட்டால்; நீங்கள் உங்கள் குதிகால்களின் மேல் (புறங்காட்டித்) திரும்பி விடுவீர்களா? ...............**

(அல்குர்ஆன் : 3:144)

ஆகிய வசனங்களை ஓதுகிறார் சாதாரணமாக நாம் சிந்திக்க வேண்டிய ஒரு விஷயம் இருக்கிறது. அன்றைக்கு இருந்த மக்களிடம் ஈஸா நபி உயிருடன் எடுத்துகொள்ள பட்டார் என்ற நம்பிக்கை இருந்தால் நம்பிக்கை இருந்தால் நிச்சயமாக முகமது நபி அவர்களும் உயிருடன் வருவார் என்று ஈஸா நபியின் காரியத்தை நினைப்பூட்டி இருந்து இருப்பார்கள். ஆனால் அபுபக்கர் அந்த வசனத்தை ஓதிய உடனே அங்கே இருந்தவர்கள் ஒரு தூக்கத்தில் இருந்து எழுந்தது போல முகமது நபியும் சாதாரண நபி தான் அவருக்கு முன் இருந்த தூதர்கள் இறந்தது போல இவரும் சென்று விட்டார் என்று நம்பினார்கள். அன்று வரை ஈஸா நபி உயிருடன் எடுத்து கொள்ள பட்டார் என்ற நம்பிக்கை அன்றைக்கு இருந்த மக்களுக்கு இல்லாதிருந்தது என்று இதன் மூலம் நாம் புரிந்து கொள்ளலாம். சரி நாம் இதை பேசும்படி வரவில்லை .

முகமது நபி அவர்களின் மரணத்துக்கு பிறகு இஸ்லாமிய உலகில் அடுத்த கலீபாவாக வந்தவர் அபுபக்கர் ஆவர். இந்த அபுபக்கர் முகமது நபி அவர்களின் நெருங்கிய தொடர்பு உள்ளவர் அவரது நண்பர் ஆவார். இது நமுக்கு தெரிந்த விஷயமே. சரி நாம் குர்ஆனில் இருந்து ஒரு வசனத்தை பார்ப்போம்.

குர்ஆன் : 2 ; 256

**(இஸ்லாமிய) மார்க்கத்தில் (எவ்வகையான) நிர்ப்பந்தமுமில்லை;......**

(அல்குர்ஆன் : 2:256)

இந்த வசனத்தை சாதாரணமாக இஸ்லாமிய உலகில் தாவா பணி செய்பவர்கள் கூறும் வசனமாகும்.

புகாரி1399, 6924, 6925 ஆகிய ஹதீஸ்களில் அபுபக்கர் அவர்கள் எந்த அளவுக்கு இஸ்லாமை பின்பற்றினார்கள் எந்த அளவுக்கு முகமது நபி அவர்களை

பின்பற்றினார்கள் என்றுநாம் பார்க்க முடியும். முகமது நபி அவர்கள் மரித்த பிறகு அன்றைக்கு முகமது நபி வாழ்ந்த காலத்தில் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டிருந்தவர்களில் பெரும் பகுதியினர் இஸ்லாத்தை விட்டு சென்றனர்.அப்போது அபுபக்கர் என்ன செய்தார்கள் என்று இந்த ஹதீஸில் பார்ப்போம். (புகாரி1399)

**அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.**

**நபி(ஸல்) அவர்கள் மரணித்து அபூ பக்ர்(ரலி) (ஆட்சிக்கு) வந்ததும் அரபிகளில் சிலர் (ஸகாத்தை மறுத்தன் மூலம்) இறைமறுப்பாளர்களாகிவிட்டனர். (அவர்களுடன் போர் தொடுக்க அபூ பக்ர்(ரலி) தயாரானார் (உமர்(ரலி), 'லா இலாஹ இல்லல்லாஹ்' கூறியவர் தம் உயிரையும் உடைமையையும் என்னிடமிருந்து காத்துக் கொண்டார் தண்டனைக்குரிய குற்றம் புரிந்தவரைத் தவிர அவரின் விசாரணை அல்லாஹ்விடமே உள்ளது' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியிருக்கும்போது, நீங்கள் எவ்வாறு இந்த மக்களுடன் போரிட முடியும்?' என்று கேட்டார். அபூ பக்ர்(ரலி), உமரை நோக்கி, 'அல்லாஹ்வின் மீது ஆணையாக, தொழுகையையும் ஸகாத்தையும் பிரித்துப் பார்ப்போருடன் நிச்சயமாக நான் போரிடுவேன். ஸகாத் செல்வத்திற்குரிய கடமையாகும்; அல்லாஹ்வின் மீது ஆணையாக! நபி(ஸல்) அவர்களிடம் வழங்கி வந்த ஓர் ஒட்டகக் குட்டியை இவர்கள் வழங்க மறுத்தால் கூட அதை மறுத்தற்காக நான் இவர்களுடன் போரிடுவேன்' என்றார். இது பற்றி உமர்(ரலி), 'அல்லாஹ்வின் மீது ஆணையாக! அபூ பக்ரின் இதயத்தை (தீர்க்கமான தெளிவைப் பெறும் விதத்தில்) அல்லாஹ் விசாலாமாக்கியிருந்தாலேயே இவ்வாறு கூறினார். அவர் கூறியதே சரியானது என நான் விளங்கிக் கொண்டேன்' என்றார்.**

ஸஹீஹ் புகாரி : 1399. அத்தியாயம் : 24.

இங்கே நன்றாக கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால் **ஸாக்காத்தை கொடுக்க மறுத்ததன் மூலம் இறைமறுப்பாளர்களாகிவிட்டனர்**. என்று பார்க்கிறோம். ஆனால் அவர்கள் இஸ்லாத்தின் கலீமாவை மறுக்கவில்லை.அவர்கள் சக்காத் கொடுப்பதை தான் மறுத்தார்கள். அப்போது இந்த மக்களிடம் போர் செய்ய அபுபக்கர் தயாரானார்கள். அப்போது உமர் அவர்கள் அபுபக்கரிடம் **இலாஹ இல்லல்லாஹ்' கூறியவர் தம் உயிரையும் உடைமையையும் என்னிடமிருந்து காத்துக் கொண்டார் தண்டனைக்குரிய குற்றம் புரிந்தவரைத் தவிர அவரின் விசாரணை அல்லாஹ்விடமே உள்ளது' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியிருக்கும்போது, நீங்கள்**

**எவ்வாறு இந்த மக்களுடன் போரிட முடியும்?'** என்று கேட்டார். அப்போது உமர் அவர்களின் இந்த கேள்வியில் இருந்து கலீமா சொன்ன ஒருவன் முஸ்லீமாக இருக்கும்போது அவன் ஒரு முஸ்லீம் என்று புரிகிறது. அப்போது முஸ்லீமிடம் போர் செய்ய அனுமதி இல்லை. அங்கே உமர் கூறும் போது தண்டனைக்குறிய குற்றம் புரிந்தவரை தவிர என்று நாம் பார்க்கிறோம். அது ஒரு வேளை இஸ்லாமிய சட்டங்கள் அமல்படுத்த படும் என்றால் அதன் மூலம் தண்டனைக்குரிய குற்றம் என்ன என்பது தீர்மானிக்க வேண்டும். இன்றைக்கு ஒருவன் திருட்டோ விபச்சாரமோ செய்தால் கூட அவன் கலீமா சொன்னால் அவன் முஸ்லீம் என்று ஹதீஸ்களில் பார்க்கிறோம். இப்படி இருக்கும்போது அதை சுட்டி காட்டி உமர் அவர்கள் அபுபக்கரிடம் கேட்கும் போது **அபூ பக்ர்(ரலி), உமரை நோக்கி, 'அல்லாஹ்வின் மீது ஆணையாக, தொழுகையையும் ஸகாத்தையும் பிரித்துப் பார்ப்போருடன் நிச்சயமாக நான் போரிடுவேன். ஸகாத் செல்வத்திற்குரிய கடமையாகும்; அல்லாஹ்வின் மீது ஆணையாக! நபி(ஸல்) அவர்களிடம் வழங்கி வந்த ஓர் ஒட்டகக் குட்டியை இவர்கள் வழங்க மறுத்தால் கூட அதை மறுத்தற்காக நான் இவர்களுடன் போரிடுவேன்' என்று சொல்கிறார். இங்கே கவனமாக பாருங்கள். சின்ன ஒரு ஒட்டக குட்டியை கூட தர மறுத்தால் அதை இறைமறுப்பாக கருதுவதாக அபுபக்கர் சொல்கிறார். ஏனென்றால் இறை மறுப்பாளர்களுக்கு எதிராக தான் போர் செய்ய வேண்டும். இப்படி இருக்கும் போது கலீமா சொன்னவர்கள் ஸ்க்காத் கொடுக்க மறுத்தால் கூட அவர்களிடம் போர் செய்வேன் என்று அபுபக்கர் கூறுகிறார். இங்கே கவனியுங்கள் *தொழுகையும் சக்காத்தையும் நான் பிரித்து பார்க்க மாட்டேன்** இதை சொன்னது யார். இது முகமது அவர்கள் சொன்னாரா அல்லது முகமது நபிக்கு அல்லாஹ் சொன்னதா. அப்படி எதுவுமே இல்லை. அப்போது இது இவராக உருவாக்கும் ஒரு சட்டமாக இருக்கிறது. இதை தான் புகாரி 6924, 6925 ஆகிய ஹதீஸ்களில் பார்க்கிறோம். அந்த ஹதீஸ்களில் தெளிவாக கேட்க படுகிறது வணக்கத்துக்குரியவன் அல்லாவை தவிர வேறு எவரும் இல்லை கூறுகிறவர் தகுந்த காரணம் இருந்தால் தவிர தன் உயிருக்கும் செல்வத்துக்கும் பாதுகாப்பு பெறுவார் என்று என்று இருக்கும்போது நீங்கள் எப்படி போர் செய்யலாம் என்று கேட்க படுகிறது. அப்போது முகமது நபி அவர்கள் சொல்லாத ஒன்றை இவர் சட்டமாக உருவாக்குகிறதை நாம் பார்க்கிறோம். அதாவது முகமது நபி அவர்களின் உபதேசத்துக்கு முரணாக தான் செயல் பட்டார் . குர்ஆன் மூலமாக அல்லாஹ் மூலமாக என்ன சொல்லப்பட்டதோ அதற்கு முரணாக தான் முதல் கலீபா அபுபக்கர் அவர்கள் செயல்பட்டார் என்று நாம் பார்க்கிறோம். இன்னும் நாம் மேலே பார்த்த குர்ஆன் வசனம் மார்க்கத்தில் எந்த வித நிர்பந்தவும் இல்லை என்று இருக்க அதற்கு முரணாக இவர் செயல்பட்டு இருக்கிறார். ஸக்காத் என்பது மார்க்க சமந்தமான ஒரு காரியமாகும். ஆனால் மார்க்கத்தில் நிர்பந்தம் இல்லை என்று குர்ஆன் வசனம் இருக்கிறது. ஸக்காத் கொடுக்காதவர்களிடம் யுத்தம் செய்யும் படி

# குர்ஆன் தொகுப்பு

அல்லாஹ் சொல்லவில்லை. முகமது நபி அவர்களும் சொல்லவில்லை. அப்படி இருக்கும்போது அவைகளுக்கு எதிராக செயல்பட இவருடைய கட்டளையின் படி தான் முதன் முதலில் குர்ஆன் தொகுக்க படுகிறது. அப்படி இருக்கும்போது அந்த குரான் எந்த அளவுக்கு நன்பகத்தன்மை இருக்கும் என்று நீங்கள் சிந்தித்து பார்க்க வேண்டும்

# சகாபாக்களும் நபி வழியும்

இஸ்லாமிய உலகில் அபுபக்கருக்கு பிறகு அடுத்து கலீபாவாக பதவியேற்றவர் தான் உமர் அவர்கள். இவர் எப்படி அல்லாவுக்கும் முகமது அவர்களுக்கும் கட்டுபட்டவராக இருந்தார் என்று பார்ப்போம். இப்போது ஒரு குரான் வசனத்தை பார்ப்போம்.

குர்ஆன் 2; 229

**(இத்தகைய) தலாக் இரண்டு முறைகள் தாம் கூறலாம் - பின் (தவணைக்குள் முறைப்படி கணவன், மனைவியாகச் சேர்ந்து வாழலாம்; அல்லது நேர்மையான முறையில் பிரிந்து போக விட்டுவிடலாம்;; .....................**

(அல்குர்ஆன் : 2:229)

இந்த வசனத்தில் தலாக் என்பது ஒவ்வொரு தனி காலத்தில் மூன்று முறை சொல்லாம். அதாவது ஒரு தலாக் கூறினால் அடுத்த தலாக் கூறுவதற்கு கால இடைவெளி வேண்டும் அது ஒரு வாரமோ ஒரு மாதமோ இருக்கலாம். அதாவது தனி தனியாக சொல்ல பட வேண்டும். அது தான் ரொம்ப முக்கியமான விஷயம். ஒரு முறை தலாக் சொன்ன பிறகு மறுபடியும் சேர்ந்து வாழ்ந்து மறுபடியும் தலாக் சொல்லி இவ்வாறாக இருக்க வேண்டும் என்று அர்த்தம். சரி இப்படி மூன்று முறை சொல்லி விட்டால் அவர்கள் விவாக ரத்து முழுமையாக பெற்றவர்களாக மாறி விடுவார். இன்றைக்கு ஒரு முஸ்லீம் தலாக் தலாக் தலாக் என்று ஒரே நேரத்தில் மூன்று முறை சொன்னால் கூட அது ஒரு தலாக்காக தான் ஏற்ப்புடையதாகும். இப்படி தான் முகமது நபியின் காலத்திலும் அபுபக்கர் அவர்களின் காலத்திலும் உமர் அவர்களின் காலத்தின் ஒரு பகுதி வரையும் நடைமுறையில் இருந்தது. இதை தான் முஸ்லீம் 2932 ஆம் ஹதீஸில் நாம் பார்க்கிறோம்.

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

**அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மற்றும் அபூபக்ர் (ரலி) அவர்கள் ஆட்சிக் காலத்திலும், உமர் (ரலி) அவர்களது ஆட்சியின் (முதல்) இரண்டு ஆண்டுகளிலும் முத்தலாக் ஒரு தலாக்காகவே (நடைமுறையில்) இருந்தது. பின்னர் உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள், "நிதானமாகச் செயல்பட்டு (மீட்டுக் கொள்வதற்கான வாய்ப்பைப் பெற்று) வந்த ஒரு விஷயத்தில் மக்கள் (இப்போது) அவசரம் காட்டுகிறார்கள். எனவே, அதை (முத்தலாக்கை) அவர்களுக்கெதிராக (மீட்டுக்கொள்ள இயலாதவாறு) நாம் செயல்படுத்தினால் என்ன?" என்று கூறி, அவ்வாறே அதைச் செயல்படுத்தினார்கள்.**

இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.

ஸஹீஹ் முஸ்லிம் : 2932.

இதே செய்தியை 2934 ஆம் ஹதீஸிலும் பார்க்கலாம்.

தாவூஸ் பின் கைசான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

**அபுஸ்ஸஹ்பா (ரஹ்) அவர்கள் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "உங்களிடமுள்ள அரிய தகவல்களைக் கூறுங்கள்; முத்தலாக், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது காலத்திலும் அபூபக்ர் (ரலி) அவர்களது காலத்திலும் ஒரு தலாக்காக இருக்கவில்லையா?" என்று கேட்டார்கள். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "ஆம்;அவ்வாறுதான் இருந்தது. பின்னர் உமர் (ரலி) அவர்களது காலத்தில் மக்கள் தலாக்கை மலிவாக்கி அவசரக் கோலத்தில் செய்ய ஆரம்பித்தபோது, உமர் (ரலி) அவர்கள் முத்தலாக்கை அவர்கள்மீது செல்லுபடியாக்கினார்கள்" என்று கூறினார்கள்.**

ஸஹீஹ் முஸ்லிம் : 2934.

நாம் ஒரு முக்கியமான விஷயத்தை பார்க்கிறோம். அதாவது அல்லாஹ் குரானில் ஒரு வசனத்தை இறக்கி வைத்து இருக்கிறார். அதாவது இரண்டு முறை தலாக் சொல்லி விட்டாலும் மூன்றாவது முறையும் நீங்கள் சேர்ந்து வாழ முடியும். மூன்றாவது முறை தலாக் சொன்னால் தான் நீங்கள் மீட்டு கொள்ள இயலாது என்று சொல்லி.

# குர்ஆன் தொகுப்பு

இதை அபுபக்கர் அவர்கள் செயல்படுத்தினார்கள். அதின் பிறகு வந்த உமர் கூட இரண்டு வருடங்கள் அதை செயல்படுத்தினார்கள். ஆனால் இரண்டு வருடங்களுக்கு பிறகு அல்லாவுக்கு மாற்றமாக  அல்லாவின் வசனத்துக்கு எதிராக  செயல்படுகிறதை நாம் பார்க்கிறோம். அதாவது ஒரே முறை தலாக் தலாக் தலாக் என்று சொன்னால் கூட அது முழுமையான தலாக் ஆகி விடும். அவர்கள் பிறகு சேர்ந்து வாழ முடியாது என்று இவர் ஒரு சட்டத்தை குரானுக்கு எதிராக அமல்படுத்துகிறார். யோசித்து பாருங்கள் மிக முக்கியமான கலீபாவான உமர் இஸ்லாமுக்கு எதிராக செயல்படுவதை.

நாம் ஏன் இதை பார்க்கிறோம் என்றால் குர்ஆன் தொகுப்புக்கு இவரும் முக்கிய காரணமாக இருந்தவர்.  அப்போது இவர்கள் எல்லாம் தங்கள் சுய விருப்பத்தை மார்க்கத்தில் சேர்த்து கொண்டார்கள் என்று பார்க்கிறோம். குர்ஆன் வசனம் என்ன சொல்கிறது முகமது நபி அவர்கள் இதை சொன்னார்களா என்று பார்க்காமல் அவர்களது விருப்பத்தை மார்க்கத்தில் பிரகடனப்படுத்தினதை நாம் பார்க்கிறோம்.

இவர் ஆட்சியாளராக இருந்த போது சட்டத்தை மாற்றினார். ஆனால் ஆட்சியாளர்கள் அல்லாதவர்களில் சிலர் சட்டங்களை மாற்றி உள்ளனர். அதையும் பார்ப்போம்.

குர்ஆனில் ஒரு வசனத்தை பார்ப்போம்.

**முஃமின்களே! நீங்கள் தொழுகைக்குத் தயாராகும்போது, (முன்னதாக) உங்கள் முகங்களையும், முழங்கைகள் வரை உங்கள் இரு கைகளையும், கழுவிக் கொள்ளுங்கள்; உங்களுடைய தலைகளை (ஈரக்கையால்) தடவி (மஸஹு செய்து) கொள்ளுங்கள்; உங்கள் கால்களை இரு கணுக்கால் வரை(க் கழுவிக் கொள்ளுங்கள்) - நீங்கள் பெருந்தொடக்குடையோராக (குளிக்கக் கடமைப் பட்டோராக) இருந்தால் குளித்து(த் தேகம் முழுவதையும் சுத்தம் செய்து)க் கொள்ளுங்கள்; தவிர நீங்கள் நோயாளிகளாகவோ, அல்லது பிரயாணத்திலோ இருந்தால், அல்லது உங்களில் எவரும் மல ஜலம் கழித்து வந்தாலும், அல்லது நீங்கள் பெண்களைத் தீண்டி (உடல் உறவு கொண்டி)ருந்தாலும் (உங்களைச் சுத்தப்படுத்திக் கொள்ள) உங்களுக்குத் தண்ணீர் கிடைக்காவிட்டால் (தயம்மும் செய்து கொள்ளுங்கள்; அதாவது) சுத்தமான மண்ணைக் (கையினால் தடவிக்) கொண்டு அவைகளால் உங்கள் முகங்களையும், உங்களுடைய கைகளையும் தடவிக் கொள்ளுங்கள்; அல்லாஹ் உங்களை வருத்தக் கூடிய எந்த சிரமத்தையும் கொடுக்க விரும்பவில்லை - ஆனால் அவன் உங்களைத் தூய்மைப் படுத்தவும்;**

# குர்ஆன் தொகுப்பு

**இன்னும் நீங்கள் அவனுக்கு நன்றி செலுத்தும் பொருட்டு, தனது அருட்கொடையை உங்கள் மீது முழுமையாக்கவும் விரும்புகிறான்.**

(அல்குர்ஆன் : 5:6)

இதே வசனத்தை 4 ; 43 ல் பார்க்கலாம். இந்த தயமம் என்றால் என்ன என்று நாம் பாத்தால் இஸ்லாமிய சட்டங்களில் தொழுகைக்கான சட்டம் என்கிறது மிக முக்கியமான சட்டம் ஆகும். இந்த தொழுகைக்கான வேளைகளில் அவர்கள் உளூ செய்து கொள்ள வேண்டும். இந்த வசனத்தில். வாசிக்கிறது போல அதே போல கழுவி கொண்டு உளூ செய்து கொள்ள வேண்டும். அவர்கள் பிரயாணத்தில் இருக்கும்போதோ நோயாளிகளாக இருக்கும்போதோ சில விதிவிலக்குகள் உண்டு. ஆனால் அதே நேரத்தில் தண்ணீர் இல்லாத சூழ்நிலையில் அவர்கள் மண்ணை எடுத்து தடவி கொண்டு தங்களை தூய்மையாக்கி கொள்ள வேண்டும். அல்லாஹ் சொல்கிறார் தண்ணீர் இல்லாத போதும் தயமம் செய்து கொள்ளுங்கள்மண்ணை கொண்டு உங்களை சுத்திகரித்து கொள்ளுங்கள் என்று தமது தூதர் மூலம் ஒரு கட்டளையாக கொடுக்கிறார். ஆனால் மிக முக்கியமான சகாபாக்களில் ஒருவரான அப்துல்லாஹ் இப்னு மசூத் அவர்கள் இதை எந்த அளவுக்கு பின்பற்றினார்கள் என்று பார்ப்போம். புகாரி 345 ஆம் ஹதீஸ்

**(குளிப்புக் கடமையானவருக்குத்) தண்ணீர் கிடைக்காவிட்டாலும் அவர் தொழ வேண்டாமல்லவா?' என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களிடம் அபூ மூஸா(ரலி) கேட்டதற்கு, 'இந்த விஷயத்தில் நாம் சலுகையளித்தால் குளிர் ஏற்பட்டால் கூட மக்கள் தயம்மும் செய்து தொழ ஆரம்பித்து விடுவார்கள்' என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி), அம்மார் இப்னு யாஸிர்(ரலி) உமர்(ரலி) அவர்களிடம் ('தண்ணீர் கிடைக்காவிட்டால் தயம்மும் செய்தால் போதுமானது' என்று) சொன்ன செய்தியை நீர் என்ன செய்வீர்?' என்று அவர் கேட்டார். அதற்கு, (அம்மார்(ரலி) உமர்(ரலி) அவர்களிடம் அச்செய்தியைக் கூறியபோது) அதை உமர்(ரலி) ஏற்றுக் கொள்ளவில்லை' என்பது உமக்குத் தெரியாதா?' என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கேட்டார்.**

**இதற்காகத்தான் தயம்மும் செய்வதை அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) வெறுத்திருக்கக் கூடுமோ?' என ஷகீக் அவர்களிடம் நான் கேட்டதற்கு, அவர் 'ஆம்! எனப் பதிலளித்தார்கள்' என அஃமஷ் அறிவித்தார்**

ஸஹீஹ் புகாரி : 345.

அத்தியாயம் : 7. தயம்மும்

இந்த அப்துல்லாஹ் இப்னு மசூத் யார் என்று நாம் பார்த்தால் மிக முக்கியமான குர்ஆன் ஆசிரியராக இருந்தவர்என்று நாம் பார்க்க முடியும். சரி இப்போது தயமம் என்ற ஒரு கடமையை அல்லாஹ் மனிதர்களுக்கு கொடுத்து இருக்கிறார். ஆனால் இந்த அப்துல்லாஹ் இப்னு மசூத் என்பவர் இந்த சட்டத்தை வெறுக்கிறதாக நாம் பார்க்கிறோம். 346 ஆம் ஹதீஸ்

**அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அபூ மூஸ அல் அஷ்அரி(ரலி) ஆகியோருடன் நானும் இருந்தபோது அபூ மூஸா(ரலி) அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களிடம் 'அபூ அப்திர்ரஹ்மானே! குளிப்புக் கடமையானவருக்குத் தண்ணீர் கிடைக்காவிட்டால் அவர் என்ன செய்ய வேண்டும்?' என்று கேட்டதற்கு, 'தண்ணீர் கிடைக்கும் வரை அவர் தொழ வேண்டியதில்லை' என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறியபோது, 'நபி(ஸல்) அவர்கள் அம்மார் இப்னு யாஸிர்(ரலி) அவர்களிடம், 'தண்ணீர் கிடைக்காவிட்டால் தயம்மும் செய்தால் போதுமானது' என்று சொன்ன செய்தியை நீர் என்ன செய்வீர்?' என அபூ மூஸா(ரலி) கேட்டதற்கு, '(அம்மார்(ரலி) உமர்(ரலி) அவர்களிடம் அச்செய்தியைக் கூறிய போது) அதை உமர்(ரலி) ஏற்றுக் கொள்ளவில்லை என்பது உமக்குத் தெரியாதா?' என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) பதில் கூறினார். அப்போது, 'அம்மார்(ரலி) அறிவிப்பதைவிட்டு விடுங்கள். 'தண்ணீர் கிடைக்காவிட்டால் தயம்மும் செய்து கொள்ளுங்கள்' என்ற இந்த இறைவசனத்தை என்ன செய்வீர்கள்?' என்று அபூ மூஸா(ரலி) கேட்டதற்கு, 'இந்த விஷயத்தில் நாம் அவர்களுக்கு அனுமதி வழங்கிவிட்டால் யாருக்காவது தண்ணீர் கொஞ்சம் குளிராகத் தெரிந்தால் அதில் உளூச் செய்வதைவிட்டுவிட்டு தயம்மும் செய்வார்' என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) தாம் சொல்லக்கூடிய இந்த வார்த்தையின் விபரீதத்தைப் புரியாமலே சொல்லிவிட்டார்.**

**இதற்காகத்தான் தயம்மும் செய்வதை அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) வெறுத்திருக்கக் கூடுமோ? என ஷகீம்டம் நான் கேட்டதற்கு அவர் 'ஆம்! என்றார்' என அஃமஷ் அறிவித்தார்.**

ஸஹீஹ் புகாரி : 346.

அத்தியாயம் : 7. தயம்மும்

## குர்ஆன் தொகுப்பு

நன்றாக கவனியுங்கள் இன்றைக்கு குர்ஆனை பாதுகாகாத்து கொடுக்க கூடிய மக்கள் யார் என்றால் இந்த ஸகாபிகள் தான். அவரில் முக்கியமான நபர் சொல்ல கூடிய இவர் அந்த நபர் அந்த சட்டத்தை அனுமதிக்க வில்லை என்று பார்க்கிறோம். புகாரி 346 ஆவது ஹதீஸை நாம் பார்க்கும் போது  தண்ணீர் கிடைக்கும் வரை தொழ வேண்டியதில்லை என்று அவர் சொல்கிறார்.  குர்ஆனை பாதுகாத்தவர்கள் என்று சொல்லப்படும் இவர்களே அல்லாவின் வசனகளை மறைத்து இருக்கிறார்கள். இதை அப்துல்லாஹ் இப்னு மசூத் மட்டும் மறைக்கவில்லை. உமர் அவர்களும் ஏற்றுக்கொள்ளவில்லை என்று நம்மால் பார்க்க முடியும். அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை என்றால் கூட பிரச்சனை கிடையாது. ஆனால் அந்த குர்ஆன் வசனங்களுக்கு மாற்றமாக போதித்து அந்த வசனங்களை மறைந்தார்கள் என்றுநம்மால் புரிந்து கொள்ள முடியும். மக்களுக்கு போதிப்பதையே தவறாக போதிக்கிறார்கள்.

இப்படி பட்டவர்கள் தான் குர்ஆனை பாதுகாத்தார்கள் என்றால் எந்த அளவுக்கு உண்மை இருக்கும் என்று சிந்தித்து பாருங்கள்.

# அன்னை ஆயிஷாவும்.... நபி வழியும்.

முதலாவது நாம் முகமது நபியின் அன்பு மகளான பாத்திமாவை குறித்து பார்க்கலாம். இஸ்லாமிய உலகில் அவர்கள் அதிகம் மதிப்பு கொடுத்து வைத்திருக்கிறார்கள். அதினால் பாத்திமாவை பற்றிய ஒரு காரியத்தை முதலில் நாம் பார்ப்போம். புகாரி 3093 ஆம் ஹதீஸை பார்க்கும் போது

**ஃபாத்திமாவுக்கு அபூ பக்ர்(ரலி), 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள், '(நபிமார்களான) எங்கள் சொத்துகளுக்கு வாரிசாக யாரும் வர முடியாது. நாங்கள்விட்டுச் செல்பவையெல்லாம் தருமம் செய்யப்பட வேண்டும்' என்று சொல்லியிருக்கிறார்கள்' என்று பதிலளித்தார்கள். ஆனால், இதனால் ஃபாத்திமா கோபமுற்று அபூ பக்ர்(ரலி) அவர்களுடன் பேசுவதைவிட்டுவிட்டார்கள். அவர்கள் மரணிக்கும் வரை அபூ பக்ர்(ரலி) அவர்களுடன் பேசாமலேயே இருந்துவிட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் தனி நிதியாக)விட்டுச் சென்ற கைபர், ஃபதக் ஆகிய பகுதிகளின் சொத்துக்களிலிருந்தும் மதீனாவில் இருந்த அவர்கள் தர்மமாகவிட்டுச் சென்ற சொத்திலிருந்தும் தமக்குப் பங்கு தரும்படியே அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் ஃபாத்திமா கேட்டுக் கொண்டிருந்தார். அபூ பக்ர்(ரலி) ஃபாத்திமாவின் கோரிக்கையை ஏற்க மறுத்து, 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செய்து**

**கொண்டிருந்த எதனையும் நான் செய்யாமல் விட மாட்டேன். ஏனெனில், அவர்களின் செயல்களில் எதனையாவது நான்விட்டுவிட்டால் நான் வழிதவறி விடுவேனோ என்று அஞ்சுகிறேன்' என்றார்கள். (அபூ பக்ர்(ரலி) அவர்களுக்குப் பின்) நபி(ஸல்) அவர்கள் மதீனாவில் தருமமாகவிட்டுச் சென்ற சொத்தை உமர் அவர்கள், அலீ அவர்களுக்கும் அப்பாஸ்(ரலி) அவர்களுக்கும் (அதன் வருமானத்திலிருந்து தம் பங்கின் அளவிற்கு எடுத்துக் கொள்ளும் படி) கொடுத்துவிட்டார்கள். கைபர் மற்றும் ஃபதக்கில் இருந்த சொத்துக்களை உமர் அவர்கள் (யாருக்கும் கொடுக்காமல்) நிறுத்தி வைத்துக் கொண்டு, 'அவ்விரண்டும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தருமமாகவிட்டுச் சென்றவை. அவை நபி(ஸல்) அவர்களின் உரிமைகளை நிறைவேற்றுவதற்காகவும் அவர்களுக்கு ஏற்படும் (திடீர் பொருளதாரப்) பிரச்சினை(கள் மற்றும் செலவினங்)களுக்காகவும் (ஒதுக்கப்பட்டு) இருந்தன. அவ்விரண்டின் அதிகாரமும் ஆட்சித் தலைவரிடம் ஒப்படைக்கப்பட வேண்டும்' என்றார்கள்.**

**இமாம் ஸுஹ்ரீ(ரஹ்) (இந்த ஹதீஸை அறிவித்த போது), 'அந்த (கைபர், ஃபதக் பகுதியிலிருந்த) இரண்டு சொத்துக்களும் இன்று வரை அவ்வாறே (ஆட்சியாளரின் பொறுப்பிலேயே) இருந்து வருகின்றன' என்றார்கள்**

ஸஹீஹ் புகாரி : 3093.

அத்தியாயம் : 57. குமுஸ்-ஐந்திலொரு பங்கு கடமை

முகமது நபி அவர்களின் மரணத்துக்கு பிறகு அடுத்த கலீபாவாக அபுபக்கர் பதியேற்ற பிறகு நடைபெற்ற ஒரு சம்பவத்தை தான் நாம் இங்கே பார்க்கிறோம். அபுபக்கரிடம் முகமது நபியின் மகள் பாத்திமா  தனது தந்தையின் சொத்தில் இருந்து பங்கு தரும்படி கேட்டார்கள். அப்போது அபுபக்கர் பாத்திமாவிடம் இரண்டு காரியத்தை கூறுகிறார்.

1;~

'இறைத்தூதர்(ஸல்) அவர்கள், '(நபிமார்களான) எங்கள் சொத்துகளுக்கு வாரிசாக யாரும் வர முடியாது. நாங்கள்விட்டுச் செல்பவையெல்லாம் தருமம் செய்யப்பட வேண்டும்' என்று சொல்லியிருக்கிறார்கள்'

2 ;~

# குர்ஆன் தொகுப்பு

'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செய்து கொண்டிருந்த எதனையும் நான் செய்யாமல் விட மாட்டேன். ஏனெனில், அவர்களின் செயல்களில் எதனையாவது நான்விட்டுவிட்டால் நான் வழிதவறி விடுவேனோ என்று அஞ்சுகிறேன்'

இவ்வாறு அபுபக்கர் அவர்கள் பாத்திமாவிடம் சொல்லும்போது இதில் நாம் கவனிக்க வேண்டிய இரண்டு விஷயங்கள் இருக்கிறது.

1 ;~

பாத்திமா அவர்கள் சொத்துக்காக ஆசைப்பட்டு அல்லாவின் வார்த்தைகளை மறுத்தார்களா

அல்லது

2 ;~

இங்கே அபுபக்கர் அவர்கள் புதிதாக ஒரு விஷயத்தை சொல்கிறீர்களா

இந்த முக்கியமான விஷயங்களை நாம் பார்க்க வேண்டும். ஏனென்றால் அபுபக்கர் அவர்கள் கலீமா சொல்லி முஸ்லீம்கள் ஆனவர்கள் சக்காத் கொடுக்கா விட்டாலும் இறைமறுப்பாளர்கள் என்று முடிவு செய்து அந்த முஸ்லீம்களுக்கு எதிராக போர் செய்ய ஆயத்தமானதை நாம் பார்த்தோம். அதினால் இந்த விஷயத்தை இவராக சொல்கிறாரா அல்லது பாத்திமா அவர்கள் தெரிந்து கொண்டே மறுக்கிறார்களா. அபுபக்கர் அவர்கள் மரிக்கும் வரை அவருடன் பாத்திமா அவர்கள் பேசவே இல்லை என்று பார்க்கிறோம். முதலில் அபுபக்கர் அவர்கள் குர்ஆன் வசனத்துக்கும் முகமது நபி அவர்கள் சொன்னதற்கு மாற்றமாக செய்தவர் இப்போது முகமது நபி அவர்கள் செய்ததை செய்யாமல் விட்டு விடுவேனோ என்று அஞ்சுகிறார் என்று பார்க்கிறோம். இப்போ பாருங்கள் எதை நம்புவது என்று. இப்படி பட்டவர்கள் தான் குர்ஆன் தொகுப்புக்கு முக்கிய பங்கு வகித்ததவர்கள் என்று பார்க்கிறோம். இதே பிரச்சனை உமர் அவர்களின் காலத்திலும் வருகிறது. அபுபக்கர் அவர்கள் கொடுக்கவே மாட்டேன் என்று என்று சொன்னார் .ஆனால் உமர் அவர்கள் மதீனாவின் தர்மத்துக்கு விட பட்டு இருந்த சொத்துக்களை எடுத்து அலி அவர்களுக்கும் அப்பாஸ் அவர்களுக்கும் சில நிபந்தனைகளை விதித்து கொடுத்து விடுகிறார். இதை அபுபக்கர் அவர்கள் செய்து இருக்கலாம் ஆனால் அவர் இதை செய்யவில்லை. உமர் அவர்கள் இதை செய்கிறார்

இதை தாம் புகாரி 3094 ல் வாசிக்கிறோம். இப்போது அபுபக்கர் அவர்கள் செய்தது சரி என்றால் உமர் அவர்கள் செய்தது தவறு என்று ஆகி விடுகிறது.

இனி நாம் முகமது அதிகம் நேசித்த என்றும் இவர் அதிகமாக முகமதுவை நேசித்து இருந்தார்கள் என்று சொல்லப்படுகிற அன்னை ஆயிஷா அவர்களை குறித்து பார்ப்போம். புகாரி 3772 ஆம் ஹதீஸில்

**அபூ வாயில்(ரஹ்) அறிவித்தார்.**

**(கலீஃபா) அலீ(ரலி) (தமக்கு ஆதரவாக 'ஜமல்' போரில் கலந்து கொள்ளும்படி) மக்களை அழைப்பதற்கு அம்மார் இப்னு யாசிர்(ரலி) அவர்களையும், (தம் புதல்வர்) ஹஸன்(ரலி) அவர்களையும் 'கூஃபா' நகருக்கு அனுப்பி வைத்தபோது (மக்களுக்கு) அம்மார் உரையாற்றினார்கள். அப்போது (தம் உரையில்) 'நபி(ஸல்) அவர்களுக்கு ஆயிஷா இந்த உலகிலும் மறுமையிலும் மனைவியாவார்கள் என்பதை நான் உறுதியாக அறிவேன். எனினும், 'நீங்கள் (கலீஃபாவின் உத்தரவுக்கு இணங்கி நடப்பதன் மூலம்) அல்லாஹ்வி(ன் கட்டளைத)னைப் பின்பற்றுவதா? அல்லது ஆயிஷாவி(ன் யோசனைத)னைப் பின்பற்றுவதா?' என ((முடிவு செய்ய வேண்டிய நிலைக்கு) உங்களை (ஆளாக்கி) அல்லாஹ் சோதனையில் ஆழ்த்திவிட்டான்' என்று கூறினார்கள்.***

ஸஹீஹ் புகாரி : 3772.

அத்தியாயம் : 62. நபித் தோழர்களின் சிறப்புகள்

இதே செய்தி புகாரி 4425 ஆம் ஹதீஸிலும் வருகிறது.

**அபூ பக்ரா(ரலி) அறிவித்தார்**

**ஜமல் போர் சமயத்தில், அதில் ஈடுபட்டவர்களுடன் நானும் சேர்ந்துகொண்டு (ஆயிஷா(ரலி) அவர்களுக்கு ஆதரவாகப்) போரிட முனைந்தபோது, இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து நான் செவியுற்றிருந்த ஒரு சொல் எனக்குப் பயனளித்தது**

**பாரசீகர்கள் கிஸ்ராவின் மகளைத் தங்களுக்கு அரசியாக்கிவிட்டார்கள் எனும் செய்தி இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு எட்டியபோது, அவர்கள் 'தம்**

**ஆட்சியதிகாரத்தை ஒரு பெண்ணிடம் ஒப்படைத்த சமுதாயம் ஒருபோதும் உருப்படாது' என்று கூறினார்கள்.**

(இதுதான் எனக்குப் பயனளித்த நபி(ஸல்) அவர்களின் சொல்.)

ஸஹீஹ் புகாரி : 4425.

அத்தியாயம் : 64. (நபிகளார் காலத்துப்)போர்கள்

இந்த ஜமல் யுத்தம் என்றால் ஒட்டக போர் ஆகும். இது எப்போது நடைபெற்றது என்றால் உஸ்மானுக்கு பிறகு கலீபா பதவிக்கு அலி அவர்கள் வந்த போது அந்த அலிக்கு எதிராக செயலப்பட்டவர் தான் ஆயிஷா அவர்கள். அலிக்கு எதிராக போர் செய்ய படைகளை திரட்டி கொண்டு யுத்தம் செய்ய புறப்பட்ட விஷயத்தை தான் நாம் மேலே உள்ள ஹதீஸில் பார்த்தோம். அந்த ஹதீஸில் **ஆட்சி அதிகாரத்தை ஒரு பெண்ணிடம் ஒப்படைத்த சமுதாயம் ஒரு போதும் உருப்படாது** முகமது நபி அவர்கள் சொன்னதாக நாம் பார்க்கிறோம். ஆனால் ஆட்சி அதிகாரத்துக்காக அலிக்கு எதிராக யுத்தம் செய்யும் படி ஆயிஷா அவர்கள் போகிறதையும் யுத்தம் செய்கிறதையும் நாம் பார்க்கிறோம். ஆயிஷா அவர்கள் முகமது நபியின் மனைவி ஆவார். அலி அவர்கள் முகமது நபியின் மருமகனும் சகோதரனும் ஆவார். இப்போது யோசித்து பாருங்கள். மிக முக்கியமான சகாபக்கள் சொல்ல போனால் முகமது நபியின் நெருங்கிய உறவினர்கள் எதிர் எதிர் அணியில் நின்று யுத்தம் செய்கிறார்கள். ஒருவருக்கு எதிராக ஒருவர் வாள் ஏந்துகிறார்கள். இன்னும் சொல்ல போனால் முகமது நபியின் வார்த்தைக்கு எதிராக அன்னை ஆயிஷா அவர்கள் ஆட்சி அதிகாரத்துக்காக போர் செய்ததை நாம் பார்க்கிறோம். இவர்கள் தான் குர்ஆனையும் ஹதீஸையும் நமுக்கு கொடுப்பதற்கு முக்கிய காரணமாக இருந்தவர்கள். இப்போது அன்னை ஆயிஷா அவர்களும் அலி அவர்களும் நேர் எதிராக யுத்தம் செய்யும்போது முக்கியமாக கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால் புகாரி 6875 ஆம் ஹதீஸை நாம் பார்க்கும்போது

**அஹ்னஃப் இப்னு கைஸ்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.**

**நான் (ஜமல் போரில்) இந்த மனிதருக்கு (அலீ(ரலி) அவர்களுக்கு) உதவுவதற்காக (காலதாமதமாக)ப் போய்க் கொண்டிருந்தேன் அப்போது அபூ பக்ரா(ரலி) அவர்கள் என்னைச் சந்தித்து, 'எங்கே செல்கிறீர்கள்?' என்று கேட்டார்கள். 'நான் இந்த மனிதருக்கு உதவச் சொல்கிறேன்' என்றேன்.**

**அதற்கு அவர்கள் கூறினார்கள்: 'நீங்கள் திரும்பிச் சென்று விடுங்கள். ஏனெனில், (ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள், 'இரண்டு முஸ்லிம்கள் தம் வாட்களால் சண்டையிட்டால் அதில் கொன்றவர், கொல்லப்பட்டவர் ஆகிய இருவருமே நரகத்திற்கே செல்வார்கள்' என்றார்கள். அப்போது நான், 'இறைத்தூதர் அவர்களே! இவரோ கொலை செய்தவர். (நரகத்திற்குச் செல்வது சரி!) கொல்லப்பட்டவரின் நிலை என்ன? (அவர் ஏன் நரகம் செல்ல வேண்டும்?)' என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'அவரைக் கொல்ல வேண்டுமென்று இவர் பேராசை கொண்டிருந்தாரே** என்று கூறினார்கள்.12

ஸஹீஹ் புகாரி : 6875.

அத்தியாயம் : 87. இழப்பீடுகள்

அதாவது இரண்டு முஸ்லீம்கள் வாள்களால் யுத்தம் செய்வார்கள் என்றால் அவர்கள் இருவரும் சண்டையிட்டு இறந்த பிறகு நரகத்த்க்கு செல்வார்கள் என்று பார்க்கிறோம். இப்படி பட்ட நபி அவர்களின் வார்த்தைகளுக்கு எதிராக செய்யப்பட்டவர்கள் தான் குர்ஆனை நமுக்கு கொடுத்தார்கள் என்று நாம் பார்க்கிறோம். இப்படி பட்டவர்கள் மூலமாக கிடைத்து இருக்கும் குர்ஆன் எந்த அளவுக்கு நன்பகத்தன்மையுடையது என்று சிந்தித்து பாருங்கள்.

இன்னும் ஒரு நபரை பற்றி பார்ப்போம் அவர் தன் **உபை இப்னு கஅப்** அவர்கள்

புகாரி 5005 ஆம் ஹதீஸை பார்க்கும்போது.

**உமர்(ரலி) கூறினார்**

**எங்களில் (குர்ஆனை) நன்கு ஓதத் தெரிந்தவர் உபை இப்னு கஅப்(ரலி) ஆவார். நாங்கள் உபை(ரலி) அவர்களின் சொற்களில் சிலவற்றைவிட்டுவிடுவோம். ஏனெனில் அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து நான் செவிமடுத்த எதையும் கைவிடமாட்டேன்' என்று சொல்வார். ஆனால், அல்லாஹ்வோ, 'எந்த ஒரு வசனத்தையாவது நாம் மாற்றிவிட்டால், அல்லது அகற்றிவிட்டால் (அதற்கு பதிலாக) அதனினும் சிறந்த, அல்லது அது போன்ற வேறு வசனத்தை நாம் கொண்டு வருகிறோம்' என்று கூறியுள்ளான்.**

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார். 30

# குர்ஆன் தொகுப்பு

ஸஹீஹ் புகாரி : 5005.

அத்தியாயம் : 66. குர்ஆனின் சிறப்புகள்

இந்த உபை இப்னு கஅப் அவர்கள் குர்ஆனை நன்கு ஓத தெரிந்தவர்களில் மிக முக்கியமானவர். நாம் ஏற்கனவே பார்த்தோம் குர்ஆனை கற்று கொள்ள இந்த நான்கு பேரிடம் செல்லுங்கள் என்று முகமது நபி அவர்கள் கூறிய அந்த நான்கு பேரில் இவரும் ஒருவராக இருந்தார். இவர் **இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து நான் செவிமடுத்த எதையும் கைவிடமாட்டேன்** என்று சொல்கிற படியால் இவரின்சொற்களில் சிலவற்றைவிட்டுவிடுவோம் என்று உமர் அவர்கள் சொல்கிறார்கள். அதற்காக உமர் அவர்கள் சொல்லும் காரணம் ;~ அல்லாஹ்வோ, 'எந்த ஒரு வசனத்தையாவது நாம் மாற்றிவிட்டால், அல்லது அகற்றிவிட்டால் (அதற்கு பதிலாக) அதனினும் சிறந்த, அல்லது அது போன்ற வேறு வசனத்தை நாம் கொண்டு வருகிறோம்' என்று கூறியுள்ளான்.

இபோது இங்கே முக்கியமான விஷயம் இதில் தவறு செய்கிறவர்கள் உமரும் அவரை சார்ந்தவர்களும் என்று நாம் சொல்ல வேண்டும். அல்லது உபை இப்னு கஅப் தவறு செய்கிறார் என்று சொல்ல வேண்டும். காரணம்

1 ;~முகமது சொல்கிறார் இவரிடம் போய் கற்று கொள்ள வேண்டும் என்று. ஆனால் உமர் சொல்கிறார் அவர் சொன்னதில் சிலதை விட்டு விடுவோம் என்று.

2 ;~எந்த ஒரு. வசனத்தை மாற்றினால் அல்லது அகற்றி விட்டால் வெறு வசனத்தை கொண்டு வருவோம் என்று அல்லாஹ் சொன்னது உபை இப்னு கஅப் அவர்களுக்குக் தெரியாதா

இப்படி இவர்களில் இரண்டு பேரில் யாரோ ஒருவர் அல்லாவுக்கும் முகமதுவுக்கும் எதிராக செயல்படுகிறார் என்று நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது.

இப்படி பட்டவர்கள் தான் குர்ஆனை நமுக்கு வழங்கி உள்ளனர். அப்படியானால் இந்த குர்ஆன் எந்த அளவுக்கு நன்பகத்தன்மையுடையது என்றுசிந்தித்து பாருங்கள்.

# குர்ஆன் தொகுப்பு

யமாமா போரில் குர்ஆன் மனப்பாடம் செய்த அநேகர் கொல்லப்பட்ட உடன் உமர் அபுகக்கரிடம் வந்து குர்ஆன் அறிஞர்களில் அனேகர் கொல்ல பட்ட படியால் குர்ஆனின் பெரும் பகுதி நம்மை விட்டு போய் விடுமோ என்று அஞ்சுகிறேன் எனவே குர்ஆனை திரட்டி ஒன்று சேர்க்க வேண்டும் என்று சொன்னார். அப்போது அபூபக்கர் இறை தூதர் செய்யாத ஒன்றை நாம் எப்படி செய்வது என்று கேட்டார். இதில் நாம் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால் குர்ஆனில் அல்லாஹ் சொல்கிறார் இதை நாமே இறக்கி வைத்தோம் நாமே பாதுகாப்போம் என்று. உண்மையில் இந்த குர்ஆன் வசனத்தை உமர் மற்றும் சகாபாக்கள் நம்பி இருந்தால் முகமது நபி அவர்கள் செய்யாத ஒன்றை இவர்கள் செய்ய வேண்டிய தேவை இல்லை. இதில் இருந்து அல்லாவின் வார்த்தையை நம்பாத உமர் அபூபக்கர் மற்றும் சகாபாக்கள் என்று நாம் புரிந்து கொள்ள வேண்டும். பிறகு அபூபக்கர் ஸைத் இப்னு ஸாபித்திடம் நீங்கள் புத்திசாலியான இளைஞர் உங்களை நாங்கள் எந்த விதத்திலும் சந்தேக பட மாட்டோம் நீங்கள் இறைதூதர் அவர்களுக்காக வேத வனங்களை எழுதக்கூடிய வராயிருந்தீர்கள். எனவே குர்ஆனை நீங்கள் தேடி கண்டு பிடித்து ஒரே பிரதியில் ஒன்று திரட்டுங்கள் என்றுகூறினார்கள். உடனே குரானை ஒன்று திரட்ட ஸைத் இப்னு சாபித் முன்வந்தார்.

**அவர் ஒன்று திரட்டியது**

**1மக்களின் கரங்களில் இருந்த குர்ஆன் சுவடிகளை தேடினார்**

**2அவற்றை பேரீச்ச மட்டைகள் ஓடுகள்**

**3குர்ஆனை மனனம் செய்து இருந்த மனிதர்களின் நெஞ்சுகள்.**

இனி இவ்வாறு திரட்டும் போது "அத்தவ்பா" என்னும் 9 வது அத்தியாயத்தின் கடைசி இரு வசனங்களை அபு குஸைமா அவர்களிடம் இருந்து பெற்றேன். **அவரல்லாத**

**வேறேவரிடமிருந்தும் இதனை நான் பெறவில்லை** என்று ஸைத் இப்னு சாபித் அவர்கள் சொல்கிறார். இதில் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால் ஸைத் இப்னு சாபித் அப்போது குர்ஆனை ஒன்று திரட்டும் போது முழு குர்ஆனையும் மனனம் செய்தவர்கள் யாருமே இல்லை என்றாகும். காரணம் அப்படி மனனம் செய்தார்கள் என்றால் **அவரல்லாத வேறெவரிடத்திலும் இதனை நான் பெறவில்லை** என்று சொல்ல வேண்டிய அவசியம் இல்லையே. இன்னும் ஸைத் இப்னு சாபித் கூட முழு குர்ஆனையும் மனனம் செய்யவில்லை என்று நம்மால் புரிந்து கொள்ள முடியும். காரணம் முழு குர்ஆனையும் அவர் மனனம் செய்து இருந்தால் ஒன்று திரட்ட வேண்டிய தேவை இல்லையே. இத்தனை செய்தியையும் புகாரி 4986 ல் நாம் பார்க்கலாம்.

இப்படி சைது உருவாக்கின குரானை அபுபக்கருக்கு கொடுத்தார். அபூபக்கர் அதை உமருக்கு கொடுத்தார். உமர் அதை அவருடைய மகளான ஹப்ஸாவுக்கு கொடுத்தார்.

இப்படி தான் குர்ஆன் முதலில் குர்ஆன் கைமாற்றப்பட்டது

இதில் கவனிக்க வேண்டிய இன்னொரு விஷயமும் இருக்கிறது. அது என்னவென்றால் ஸைத் இப்னு ஸாபித் ஒரு ஞாபக மறதி காறராக கூட இருந்தார் என்பதாகும். அதற்கு ஆதாரம் என்னவென்றால் புகாரி4988 ஆம் ஹதீஸில் நாம் பார்க்கும் போது

ஸைத் இப்னு ஸாபித் சொல்கிறார் ;~ நாங்கள் (உஸ்மான் அவர்களின் ஆட்சி காலத்தில்) குரானுக்கு பிரதிகள் எடுத்த போது அல்அஹ்ஸாப் என்னும் 33 ஆவது அத்தியாயத்தில் ஒரு வசனம்(33;23) காணவில்லை அதனை இறைதூதர் அவரகள ஓத நான் கேட்டிருந்தேன் என்று. இவ்வாறு அவர் கூறி விட்டு உடனே அந்த வசனத்தை குர்ஆன் பிரதியில் அதற்குறிய அத்தியாயத்தில் இணைத்து விட்டோம்.என்று சொல்கிறார்.

இதில் நாம் கவனிக்க வேண்டிய சில விஷயங்கள் இருக்கிறது. அது என்னவென்றால் சாதாரணமாக இஸ்லாமியர்கள் சொல்வது என்னவென்றால் ஸைத் இப்னு ஸாபித் அவர்கள் குர்ஆனை ஒன்று திரட்டும் காலத்தில் முழு குர்ஆனையும் மனனம் செய்தவர்கள் நிறைய பேர் இருந்தார்கள் என்று. அப்படியானால் ஸைத் இப்னு ஸாபித் மறந்த இந்த வசனத்தை அவர்கள் அன்றைக்கே நீங்கள் இந்த வசனத்தை விட்டு

விட்டீர்கள் என்று நினைப்பூட்டி இருப்பார்கள். காரணம் இந்த சம்பவம் நடக்கிறது எப்போது என்றால் அபுபக்கரின் காலத்துக்கு பிறகு உமரின் காலத்துக்கு பிறகு உஸ்மானின் ஆட்சி காலத்தில் ஆகும். இதன் மூலம் குர்ஆனில் முகமது நபி அவர்கள் கொடுத்த அல்லா வசனங்களும் இருக்கிறதா என்று கேட்டால் யாருக்கும் தெரியும். ஏதாவது வசனங்கள் விடுபட்டு விட்டதா என்று கேட்டால் யாருக்கு தெரியும்.

இனி அடுத்ததாக நாம் பார்க்க வேண்டிய காரியம் இந்த ஸைத் இப்னு சாபித் தயாரித்த அல்லாமல் வேறு குர்ஆன் ஏதாவது இருந்ததா  அதாவது அபுபக்கரின் சொன்னதின் பேரில் ஸைத் இப்னு சாபித் ஒன்று திரட்டி அபுபக்கரின் கையில் கொடுத்ததும் அபுபக்கர் அதை உமரின் கையில் கொடுத்ததும் உமர் அதை தமது மகளான ஹப்ஸாவுக்கு கொடுத்ததும் பின்பு உஸ்மான் அதை வாங்கி பிரதி எடுத்து பல நாடுகளுக்கு அனுப்பினதுமான இந்த குர்ஆனை கூடாமல் வேறு குர்ஆன் ஏதாவது இருந்ததா ;~

ஆம் இருந்தது என்பது தான் உண்மை. புகாரி 4987 ஆம் ஹதீஸில் நாம் பார்க்கும் போது ;~ அனஸ் இப்னு மாலிக் அறிவித்தார்  ஹுதைஃபா யமான் என்பவர் உஸ்மானிடம் வந்தார்கள். உஸ்மான் ஆர்மீனியா மற்றும் அஃதர் பைஜான் ஆகிய நாடுகளை இராக்கியருடன் சேர்ந்து வெற்றி கொள்வதற்கான போரில் கலந்துகொள்ளுமாறு ஷாம்வாசிகளுக்கு ஆணை பிறப்பித்தார்கள்.  அப்போது ஹுதைஃபாவுக்கு ஈராக் மற்றும் ஷாம் நாட்டு முஸ்லீம்கள் குர்ஆனை கருத்து வேறுபாடுகள் இருப்பதை கண்டு அதிர்ச்சி வந்தது. அதினால் ஹுதைஃபா உஸ்மானிடம் வந்து குர்ஆனில் கருத்து வேறுபாடுகள் மக்களிடம் வரும் முன்பே அவர்களை காப்பாற்றுங்கள் என்று கூறினார்.  உடனே உஸ்மான் உமரின் மகளான ஹப்ஸாவிடம் ஆள் அனுப்பி தங்களிடமுள்ள குர்ஆன் பதிவை எங்களிடம் கொடுத்து அனுப்புங்கள். நாங்கள் அதனை பல பிரதிகள் படியெடுத்து விட்டு திருப்பி தந்து விடுகிறோம் என்று தெரிவித்தார்கள்.உடனே ஹப்சா தன்னிடம் இருந்த குர்ஆன் பதிவை உஸ்மானிடம் கொடுத்து அனுப்பினார்கள்.அதின் பிறகு உஸ்மான் அந்த குரானை பல பிரதிகளில் படியெடுக்கும் படி ஸைத் இப்னு சாபித்தும் கூட மூன்று குரோஷிகளை நியமித்தார் மொத்தம் நான்கு பேர். அவர்களின் பெயர் கீழே கொடுக்கப்படுகிறது.

**1 ஸைத் இப்னு சாபித்**

**2அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்**

**3 ஸயீத் இப்னு ஆஸ்**

**4அப்துர் ரஹ்மான் இப்னு ஹாரிஸ் இப்னி ஹிஷாம்**

சரி . மேலும் உஸ்மான் அந்த நால்வரில் குரேஷி குழுவினரான மூவரை நோக்கி ; நீங்களும் ஸைத் இப்னு சாபித் அவர்களும் எழுத்திலக்கண விஷயத்தில் கருத்து வேறுபாடு வந்தால்குரோஷிகளின்மொழி வழக்கு படியே பதிவு செய்யுங்கள் ஏனெனில் குர்ஆன் குரோஷிகளின் மொழி வழக்கு படியே இறங்கிற்று என்றார்கள். அதாவது ஸைத் இப்னு சாபித் ஒன்றிணைத்த குர்ஆன் மறுபடியும் திருத்தபடுகிறது. இப்போதே இரண்டு மாற்றங்கள் குர்ஆனில் வந்தது.

1;~அதாவது ஸைத் இப்னு சாபித் ஒன்றிணைத்த குர்ஆனில் மறுபடியும் ஒரு வசனத்தை சேர்க்கிறார்.

2;~பிறகு அந்த குரானை பிரதி எடுக்கும்போது ஸைத் இப்னு சாபித்துக்கும் குரோஷி குழுவினருக்கும் ஏற்ப்படும் கருத்து வேறுபாடு வரும் போது அது குரோஷி குழுவின் பேச்சு வழக்கில் எழுத படுகிறது.

சரி இவ்வாறே நால்வரும் செயல்பட்டார்கள். இப்படியாக அந்த பதிவை பல பிரதிகளில் படியெடுத்தார்கள். பிறகு உஸ்மான் அந்த குரானை ஹப்சாவிடம் திருப்பி கொடுத்து விட்டார்கள். அவர்கள் படியெடுத்த பிரதிகளில் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு பகுதிக்கும் அனுப்பி வைத்தார்கள். பிறகு இராக் ஷாம் நாட்டு மக்களிடம் புழக்கத்தில் இருந்த பிரதிகளை( குர்ஆனை) எரித்து விடும் படி உஸ்மான் உத்தரவிட்டார். அப்போது நாம் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால் எதற்கு உஸ்மான் மற்ற குரான்களை எல்லாவற்றையும் எரித்தார்? அவ்வாறு செய்ய காரணம் என்ன?. உடனே இஸ்லாமிய சகோதரர்கள் சொல்வார்கள் அது ஓதல்லில் இருந்த வித்தியாசம் அதினால் தான் உஸ்மான் எரித்தார் என்று சொல்வார்கள். ஆனால் இதிலும் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால் குரானில் 7 வகையான ஓதல்கள் இருந்தது. இதை முகமது நபி அவர்களே அங்கீகரித்தாரே அதை இன்றைக்கு இருக்கும் முஸ்லீம்கள் கூட ஏற்றுகொள்ள கூடிய விஷயம் தானே(புகாரி 4992). அப்போது இதில்

# குர்ஆன் தொகுப்பு

இருந்தே புரிந்துகொள்ளலாம் ஸைத் இப்னு சாபித் ஒன்றிணைத்த குர்ஆனை அல்லாமல் வேறு வகையான குர்ஆன்கள் இருந்தது என்று.

அப்போது நமுக்கு ஒரு சந்தேகம் வரும் உண்மையில் உஸ்மான் எரித்த குரானா அல்லது ஸைத் இப்னு சாபித் ஒன்றிணைத்த குரானா இதில் எது தான் உண்மையான குர்ஆன் என்று. அதற்கான விடையை நாம் பார்ப்போம்;~ உஸ்மான் மற்ற குர்ஆன்களை எல்லாம் எரித்து சொன்ன பிறகு நடந்த சம்பவத்தை நாம் கவனிக்க வேண்டும்.

ஸைத் இப்னு சாபித் மற்றும் குரோஷி குழுவினர் சேர்ந்து குர்ஆனை நகல் எடுக்கும்போது அப்துல்லா இப்னு மசூத் விரும்பவில்லை என்று பார்க்கலாம்.

அதற்கான காரணத்தையும் அவரே( அப்துல்லா இப்னு மசூத்) கூறுகிறார் ;~ நான் இஸ்லாத்தை ஏற்ற போது அவர்( ஸைத் இப்னு சாபித்) நம்பிக்கையற்ற(இஸ்லாமல்லாத) ஒரு மனிதனின் இடுப்பில் இருந்தார்.

இனி அந்த ஹதீஸை தொடர்ந்து வாசிக்கும்போது அப்துல்லா இப்னு மசூத் கூறுகிறார்;~ அல்-ஈராக் மக்களே! உங்களுடன் இருக்கும் முசாஹிப்பை( குர்ஆனை) வைத்து, அவற்றை மறைக்கவும்.

இப்படி மறைக்க சொல்ல காரணம் என்னவென்றால் உஸ்மான் மற்றும் ஸைத் இப்னு சாபித் அவர்கள் உருவாகின குர்ஆனை தவிர மற்ற எல்லா குர்ஆனையும் எரித்து விட போகிறார்கள். அப்போது இதில் இருந்து நாம் புரிந்து கொள்ள வேண்டிய விஷயம் என்னவென்றால் ஸைத் இப்னு சாபித் ஒன்றிணைத்து உஸ்மான் கட்டளை படி திருத்தி எழுதி பிரதி எடுத்த இந்த குர்ஆனை அப்துல்லாஹ் இப்னு மசூத் கடுமையாக எதிர்த்தார். மட்டுமல்ல இராக் மக்களிடம் இருந்த குர்ஆனை அவர் ஆதரித்தார். (இவ்வளவு செய்தியும் திர்மிதீ vol 5 book 44 hadith no 3104,) அப்போது நம்முடைய கேள்வி என்னவென்றால்

ஸைத் இப்னு சாபித் ஒன்றிணைத்து உஸ்மான் தலையில் திருத்தி எழுதி பிரதி எடுத்த குர்ஆன் தான் உண்மையான குரானா?

அல்லது இராக் மக்களிடம் இருந்ததும் அப்துல்லாஹ் இப்னு மசூத் ஆதரித்ததுமான அந்த குர்ஆன் தான் உண்மையான குரானா?

இதற்கான பதிலை நாம் பார்க்க வேண்டுமானால் முதலில் இந்த அப்துல்லாஹ் இப்னு மசூத் யார் என்று நாம் அறிய வேண்டும். இவர் யார் என்று நாம் பார்க்கும்போது முகமது நபி அவர்கள் ஏற்றுக்கொண்ட மிக முக்கியமான குர்ஆன் ஆசிரியர் ஆவார். புகாரி 3758 ஆம் ஹதீஸை நாம் பார்க்கும் போது முகமது நபி அவர்கள் குர்ஆனை கற்றுக்கொள்ள நான்கு பேரை அறிமுக படுத்தியதாக பார்க்கலாம்.

**1 அப்துல்லாஹ் இப்னு மசூத்**

**2 அபூ ஹுதைஃபாவின் (முன்னாள்)அடிமையான சாலிம்.**

**3 உபை இப்னு கஅப்**

**4 முஆத் இப்னு ஜபல்**

இவர்களில் அப்துல்லாஹ் இப்னு மசூதை முதன்மையாக சொல்லப்பட்டு இருக்கிறது.

அப்போது இந்த அப்துல்லாஹ் இப்னு மசூத் ஸைத் இப்னு சாபித் மற்றும் உஸ்மான் ஆகியவர்கள் தயாரித்த குர்ஆனை ஏற்றுக்கொள்ளாமல் அவர் இராக் மக்களிடம் இருந்ததும் அவர் ஆதரித்ததுமான குரானை உஸ்மான் எரித்தால் அதின் அர்த்தம் என்ன;~ முகமது நபி அருளிய உண்மையான குர்ஆன் இன்றைக்கு இல்லை என்பதே ஆகும்.

# குர்ஆனில் இருந்த கல்லெறி தண்டனை வசனம் எங்கே

முகமது நபி அவர்கள் கொடுத்த குரானில் கல்லெறி தண்டனை இருந்ததாக நம்மால் பார்க்க முடியும்

சில ஹதீஸ்களை கீழே பார்ப்போம்

இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

# குர்ஆன் தொகுப்பு

உமர்(ரலி) கூறினார்: **காலப் போக்கில் மக்களில் சிலர் 'இறை வேதத்தில் கல்லெறி (ரஜ்கி) தண்டனை காணப்படவில்லையே?'** என்று கூறி, இறைவன் அருளிய கடமை ஒன்றைக் கைவிடுவதன் மூலம் வழிதவறி விடுவார்களோ என நான் அஞ்சுகிறேன். அறிந்துகொள்ளுங்கள்: திருமணமான ஒருவர் விபசாரம் புரிந்து, அதற்கு சாட்சி இருந்தாலோ, கர்ப்பம் உண்டானாலோ, ஒப்புதல் வாக்கு மூலம் அளித்தாலோ அவருக்குக் கல்லெறி தண்டனை உண்டு என்பது நிச்சயமாகும்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுஃப்யான்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: 'அறிந்து கொள்ளுங்கள்! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கல்லெறி தண்டனை நிறைவேற்றினார்கள். அவர்களுக்குப் பின் நாங்களும் அதனை நிறைவேற்றினோம்' (என்றும் உமர்(ரலி) கூறினார்). **இவ்வாறுதான் நான் மனனமிட்டுள்ளேன்.**

ஸஹீஹ் புகாரி : 6829.

அத்தியாயம் : 86. குற்றவியல் தண்டனைகள்

இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.................................

உமர்(ரலி) அவர்கள், **நிச்சயமாக அல்லாஹ் முஹம்மத்(ஸல்) அவர்களை சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பினான். மேலும், அவர்களுக்கு (குர்ஆன் எனும்) வேதத்தையும் அருளினான். அல்லாஹ் அருளிய (வேதத்)தில் கல்லெறி தண்டனை (ரஜ்கி) சம்பந்தமான வசனம் இருந்தது' என உமர்(ரலி) அவர்கள் பேசத் தொடங்கினார்கள்.**55

புகாரி : 7323.

அத்தியாயம் : 96. இறைவேதத்தையும் நபிவழியையும் கடைப்பிடித்தல்

மேலே உள்ள இந்த ஹதீஸ்களில் இருந்து முகமது நபி அவர்கள் அருளிய வேதத்தில் கல்லெறி தண்டனை வசனம் இருந்ததாக உமர் அவர்கள் கூறுகிறார். ஆனால் இன்றைக்கு அந்த வசனம் குர்ஆனில் இல்லை என்று நாம் பார்க்கிறோம். குர்ஆன் பாதுகாக்க படவில்லை என்று இதன் மூலம் நம்மால் புரிந்து கொள்ள முடியும்.

# பால் குடி சட்டம்

# குர்ஆன் தொகுப்பு

பால் குடி சட்டம் கூட முகமது நபி அவர்கள் கொடுத்த குரானில் இருந்ததாக ஹதீஸில் நாம் பார்க்கலாம்.

அம்ரா பின்த் அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

ஆயிஷா (ரலி) அவர்கள், எத்தனை முறை பால் குடித்தால் பால்குடி உறவு உண்டாகும் என்பதைப் பற்றிக் கூறுகையில் பின்வருமாறு கூறினார்கள்: குறிப்பிட்ட பத்து தடவைகள் பால் அருந்தினால்தான் (பால்குடி உறவு உண்டாகும்) **என்ற சட்டம் குர்ஆனில் இடம் பெற்றிருந்தது. பின்னர் குறிப்பிட்ட ஐந்து தடவைகள் என்ற சட்டம் அருளப்பெற்றது.**

- மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஸஹீஹ் முஸ்லிம் : 2877.

அத்தியாயம் : 17. பால்குடி (சட்டம்)

**ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:**

**குறிப்பிட்ட பத்து தடவைகள் பால் அருந்தினால்தான் பால்குடி உறவு உண்டாகும்" என்ற வசனம் (முதலில்) குர்ஆனில் அருளப்பட்டிருந்தது.**

**பின்னர் பத்து தடவைகள் என்பது, குறிப்பிட்ட ஐந்து தடவைகள் என மாற்றப்பட்டது. இவ்வசனம் மக்கள் சிலரால் ஓதப்பட்டுவந்த காலத்தில்தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இறந்தார்கள்.**

ஸஹீஹ் முஸ்லிம் : 2876.

**அத்தியாயம் : 17. பால்குடி (சட்டம்)**

இந்த வசனம் குர்ஆனில் இருந்ததாகவும் இந்த வசனம் ஓதப்பட்டு. இருக்கும்போது தான் முகமது நபி அவர்கள் இறந்ததாகவும் மேலே உள்ள ஹதீஸ்களில் நாம் பார்க்கிறோம்.

ஆனால் இந்த வசனத்துக்கு என்ன ஆனது என்று நாம் பாத்தால் அவைகளை ஆடு சாப்பிட்டதாக நம்மால் பார்க்க முடியும்.

# குர்ஆன் தொகுப்பு

عن عائشة قالت لقد نزلت آية الرجم ورضاعة الكبير عشرا ولقد كان في صحيفة تحت سريري فلما مات رسول الله صلى الله عليه وسلم وتشاغلنا بموته دخل داجن فأكلها

**கல்லெறிதல் மற்றும் வயது வந்தவர் பால்குடி சம்பந்தமான வெளிப்படுத்தப்பட்ட சட்டத்தை தாளில் எழுதி கட்டிலில் கீழ் வைத்திருந்தோம். அல்லாஹ்வின் தூதர் இறந்த சமயத்தில் நாங்கள் அதில் முழ்கியிருந்தபோது ஆடு புகுந்து அந்த தாள்களை தின்று விட்டது.**

(1944, சுனன் இப்னு மாஜா)

**Reported 'Aisha (RA): 'the verse of stoning and of suckling an adult ten times was revealed, and they were (written) on a paper and kept under my pillow. When the Messenger of Allah (PBUH) expired and we were occupied by his death, a goat entered and ate away the paper.' (Sunan Ibn Majah, Hadith 1944)**

## இன்றைக்கு குர்ஆனில் இல்லாத இன்னொரு குர்ஆன் அதிகாரத்தை இந்த ஹதீலில் பார்க்காலம்

முஸ்லிம்

1897. அபுல் அஸ்வத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் பஸ்ரா (இராக்) நகரத்திலுள்ள குர்ஆன் அறிஞர்களிடம் (அவர்களை அழைத்து வருமாறு) ஆளனுப்பினார்கள். (அவர்களது அழைப்பை ஏற்று) **குர்ஆனைக் கற்றறிந்த முன்னூறு பேர் அவர்களிடம் வந்தார்கள்** . அப்போது அவர்களிடம் அபூமூசா (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:

பஸ்ராவாசிகளிலேயே நீங்கள்தாம் சிறந்தவர்கள் ஆவீர்கள்; அவர்களிலேயே குர்ஆனை நன்கறிந்தவர்களும் ஆவீர்கள். எனவே, (தொடர்ந்து) குர்ஆனை ஓதிவாருங்கள். காலம் நீண்டுவிட்ட போது உங்களுக்கு முன் வாழ்ந்த (வேதம் அருளப்பெற்ற சமுதாயத்த)வர்களின் உள்ளங்கள் இறுகிவிட்டதைப் போன்று உங்களுடைய உள்ளங்களும் இறுகிவிட வேண்டாம். **நாங்கள் (நபி (ஸல்) அவர்களது காலத்தில்) ஓர் அத்தியாயத்தை ஓதிவந்தோம்; நீளத்திலும் கடுமை(யான எச்சரிக்கை விடுக்கும் தோரணை)யிலும் "பராஅத்" எனப்படும் (9ஆவது) அத்தியாயத்திற்கு நிகராக அதை நாங்கள் கருதினோம். ஆனால், அந்த அத்தியாயத்தை நான் மறக்கச்**

**செய்யப்பட்டுவிட்டேன். ஆயினும், அதில் "ஆதமின் மகனுக்கு (மனிதனுக்கு) இரு ஓடைகள் (நிரம்ப) செல்வம் இருந்தாலும் மூன்றாவது ஓடையை அவன் தேடுவான். ஆதமின் மகனுடைய வயிற்றை (சவக்குழியின்) மண்ணைத் தவிர வேறெதுவும் நிரப்பாது" எனும் வசனத்தை நான் நினைவில் வைத்துள்ளேன். மேலும், மற்றோர் அத்தியாயத்தையும் நாங்கள் ஓதிவந்தோம். அதை (சப்பஹ, யுசப்பிஹு, சப்பிஹ் என) இறைத்துதியில் தொடங்கும் அத்தியாயங்களில் ஒன்றுக்கு நிகராகவே நாங்கள் கருதினோம். அந்த அத்தியாயத்தையும் நான் மறக்கச்செய்யப்பட்டுவிட்டேன். ஆயினும்,அதில் "நம்பிக்கை கொண்டவர்களே! நீங்கள் செய்யாததை ஏன் சொல்கிறீர்கள்? (அவ்வாறு நீங்கள் செய்யாததைப் பிறருக்குச் சொல்வீர்களாயின்) அது உங்களுக்கு எதிரான சாட்சியாக உங்களுடைய கழுத்துகளின் மீது எழுதப்படும். பின்னர் மறுமை நாளில் அது குறித்து நீங்கள் விசாரிக்கப்படுவீர்கள்" எனும் வசனத்தை நான் நினைவில் வைத்துள்ளேன். (இந்த அத்தியாயங்கள் பின்னர் மாற்றப்பட்டுவிட்டன.)**

**Book : 12**

இந்த வசனம் இன்றைக்கு குர்ஆனில் இல்லை என்று நம்மால் பார்க்க முடியும்.

# இன்னும் ஆயிஷாவிடம் இன்னொரு குர்ஆன் இருந்ததையும் நம்மால் பார்க்க முடியும்

ஸஹீஹ் புகாரி : 4993.

யூஸுஃப் இப்னு மாஹக்(ரஹ்) அறிவித்தார்

இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா(ரலி) அவர்களிடம் நான் இருந்து கொண்டிருந்தேன். அப்போது இராக் நாட்டைச் சேர்ந்த ஒருவர் வந்து, '(இறந்தவருக்கு அணிவிக்கப்படும்) 'கஃபன்' துணியில் சிறந்தது எது? (வெள்ளை நிறமா? மற்ற நிறமா?)' என்று கேட்டார். ஆயிஷா(ரலி), 'அடப்பாவமே! (நீங்கள் இறந்ததற்குப் பின்னால் எந்தக் கஃபன் துணியால் அடக்கப்பட்டாலும்) உங்களுக்கு என்ன கஷ்டம் வந்துவிடப்போகிறது?' என்று கேட்டார்கள். அதற்கவர், 'இறைநம்பிக்கையாளர்களின் **அன்னையே! தங்களிடமுள்ள குர்ஆன் பிரதியை எனக்குக் காட்டுங்கள்?' என்று கூறினார். (அன்னை) அவர்கள், 'ஏன்?' என்று கேட்டார்கள். அதற்கவர், 'அதனை**

# குர்ஆன் தொகுப்பு

**(முன்மாதிரியாக)க் கொண்டு நான் குர்ஆனை (வரிசைக் கிரமமாக) தொகுக்க வேண்டும். ஏனெனில், (தற்போது) வரிசைப் பிரகாரம் தொகுக்கப்படாமல் தான் குர்ஆன் ஓதப்பட்டு வருகிறது' என்று கூறினார். ஆயிஷா(ரலி), '(வரிசைப்படுத்தப்படாமல் உள்ள குர்ஆன் அத்தியாயங்களில்) எதை நீங்கள் முதலில் ஓதினால் (என்ன? எதை அடுத்து ஓதினால்) என்ன கஷ்டம் (ஏற்பட்டு விடப்போகிறது?)' என்று கேட்டார்கள்.**

'முஃபஸ்ஸல்' (எனும் ஓரளவு சிறிய) அத்தியாயங்களில் 19 உள்ள ஒன்றுதான் முதன் முதலில் அருளப்பட்டது; அதில் சொர்க்கம் முதலில் அருளப்பட்டது; அதில் சொர்க்கம் நரகம் பற்றிக் கூறப்பட்டது. 20 அடுத்து மக்கள் இஸ்லாத்தை நோக்கித் திரும்பி (அதன் நம்பிக்கைகளின் மீது திருப்தியடையத் தொடங்கியபோது அனுமதிக்கப்பட்டவை மற்றும் விலக்கப்பட்டவை குறித்த வசனங்கள் அருளப்பட்டன. எடுத்த எடுப்பிலேயே 'நீங்கள் மது அருந்தாதீர்கள்' என்று வசனம் அருளப்பட்டிருந்தால் அவர்கள், அல்லது, 'விபச்சாரம் செய்யாதீர்கள்' என்ற (முதன் முதலில்) வசனம் அருளப்பட்டிருக்குமானால், நிச்சயம் அவர்கள், 'நாங்கள் ஒருபோதும் விபசாரத்தைக் கைவிடமாட்டோம்' என்று கூறியிருப்பார்கள். (எனவேதான் அல்லாஹ், படிப்படியாகச் சட்ட விதிகளைக் கூறும் வசனங்களை அருளினான்.) நான் விளையாடும் சிறுமியாக இருந்தபோதுதான் மக்காவில் முஹம்மத்(ஸல்) அவர்களுக்க '(இவர்களின் கணக்கைத் தீர்ப்பதற்காக உண்மையில்) வாக்களிக்கப்பட்ட நேரம் மறுமை நாளாகும். மேலும், அந்த நேரம் மிகவும் அதிர்ச்சியளிக்கக் கூடியதும், கசப்பானதுமாகும்' எனும் (திருக்குர்ஆன் 54:56 வது) வசனம் அருளப்பட்டது. (சட்டங்கள் சம்பந்தமான வசனங்கள் இடம் பெற்றுள்ள) அல்பகரா (2 வது) அத்தியாயமும், அந்நிஸா (4 வது) அத்தியாயமும் நான் (மதீனாவில்) நபி(ஸல்) அவர்களுடன் (அவர்களின் மனைவியாக) இருந்தபோதுதான் இறங்கின என்று கூறிவிட்டு, ஆயிஷா(ரலி) தம்மிடமிருந்த அந்தக் குர்ஆன் பிரதியை (இராக் நாட்டவரான) அந்த மனிதருக்காகக் கொண்டுவந்து அவருக்காக ஒவ்வோர் அத்தியாயத்தின் வசனங்களையும் எழுதச் செய்தார்கள்.

ஸஹீஹ் புகாரி : 4993.

அத்தியாயம் : 66. குர்ஆனின் சிறப்புகள்

**இந்த ஆயிஷாவிடம் இருந்த குர்ஆன் என்ன ஆனது**

# Abu ‘Ubaid on the Verses Missing from the Koran

https://erenow.net/common/the-origins-of-the-koran/9.php

## மொஹம்மத்துவின் மரணம் சொல்லும் செய்தி சான்றுகளுடன் ஒரு பார்வை

மொஹம்மது இட்டுக்கட்டி குரானை தயாரித்தால் அல்லது குரானில் கள்ளத்தனம் செய்தால் மொஹம்மத்துவின் இருதய ரத்தகுழலை நான் அறுத்துவிடுவேன் என்று அல்லாஹ் சொன்னதாக குரான் ஆயத்து இருக்கிறது ..

We would have seized him by the right hand

69;45

Then We would have cut from him the aorta.

69:46



Link; https://quran.com/69

இதில் aorta என்பது இருதய ரத்தகுழல் என்பதை குறிக்கும் .

இதன் அரபி சொல் அல்வதீன் ...

இங்கே குரான் தெளிவா சொல்லுது , மொஹம்மது கள்ள தீர்கதரிசியக இருந்தால் ,, அவரின் இருதய ரத்தகுழல் அறுபட்டு இறப்பார் என்று ...

ஆதாரம்
;https://www.google.com/search?safe=active&source=hp&ei=ojf2XNmBFdrWz7sP9eOW6A8&q=aorta&oq=aorta&gs_l=mobile-gws-wiz-hp.3..0i67l3j0l5.496.1970..3682...1.0..0.408.1666.0j1j3j1j1....3..0....1.......8..35i39j46i39j46i39i19i275j46i19j0i19..8%3A1j9%3A1.6JBRLyNPECI

இது மொஹம்மத்துவின் மரணத்தில் 100 க்கு 100 சரியாக நிறைவேறியது ...

மொஹம்மது தன்னுடைய மரணத்தின் போது ஆயிஷாவிடம் இப்படி சொல்கிறார் …

என்னுடைய இருதய ரத்தகுழல் அறுபடுவதை நான் இப்போது உணர்கிறேன் என்று

👇▨👇▨👇▨👇▨👇👇👇👇

Narrated `Aisha:

The Prophet (ﷺ) in his ailment in which he died, used to say, "O `Aisha! I still feel the pain caused by the food I ate at Khaibar, and at this time, 👉I feel as if my aorta is being cut from that poison."👈👈

: Sahih al-Bukhari 4428



**இங்கே தெளிவாக மொஹம்மது சொல்கிறார் என்னுடைய இருதய ரத்தகுழல் அறுபடுகிறது என்று ..**

**மொஹம்மது உண்மையானவராக இருந்தால் ஏன் குரானில் கள்ள தீர்க்கதரிசி எப்படி சாவான் என்று சொல்லிய அதே முறையில் ஏன் சாகவேண்டும்** ?!?!?!?!?!?!?!?!?

**கள்ள தீர்கதரிசிக்கு கிடைக்கும் தண்டனை மொஹம்மது அனுபவித்தார் என்றால் மொஹம்மது ஒரு கள்ள தீர்கதரிசித்தான் என்பதை புரிந்து கொள்ளுங்கள்**

இன்னொரு விஷயம் என்னவென்றால் மொஹம்மதுவுக்கு விஷம் வைத்த யூதப்பெண்ணை விசாரித்த போது , அந்த பெண் சொல்கிறாள் .நீங்கள் உண்மையான தீக்கதரிசியானால் உங்களுக்கு நான் வைத்த விஷத்தால் எந்த பாதிப்பும் ஏற்படாது , ஆனால் நீங்கள் போலியான நபியாக இருந்தால் நான் வைத்த விஷம் உங்களுக்கு பாதிப்பை ஏற்படுத்தும் என்று ..

ஆக மொஹம்மதுவை விஷத்தின் பாதிப்பில் இருந்து காக்கவேண்டிய கடமை அல்லாஹ்வுக்கு இருந்தது , ஆனால் அல்லாஹ் மொஹம்மதுவை விஷத்தின் பாதிப்பில் இருந்து பாதுகாக்கவே இல்லை . அல்லாஹ்வே மொஹம்மதுவை காக்க மணமில்லாதவனாய் போனது எப்படி ?!?!?!?!?!?!?!?

## FINDING TRUTH

**Condent** : ABI

**Edit** : JEBA